# இன்றைய அரபி மதரஸாக்கள் - ஓர் ஆய்வு

அபூ ஃபாத்திமா

**மறு பதிப்பு : செப். அக். 1990**

அரபி மதரஸாக்கள் என்றவுடன் மக்களின் உள்ளங்களில் நபி(ஸல்) அவர்களது காலத்திலிருந்து இன்று வரை மார்க்கத்தைப் பேணிப் பாதுகாத்து வரும் உன்னத அமைப்புகள், சமுதாயத்தின் ஜீவ நாடி, இந்த மதரஸாக்களிலிருந்து பெறப்படும் மார்க்கத் தீர்ப்புகள் தான்(ஃபத்வா) இறுதி முடிவு; அவற்றிற்கு அப்பீலே இல்லை என்ற அசைக்க முடியாத நம்பிக்கை இருந்து வருகிறது. அப்படி ஒரு மாயத் தோற்றத்தை இந்த மவ்லவிகள் உண்டாக்கி வைத்துள்ளனர்.

**மதரஸாக்கள் ஆரம்பிக்கப்பட்ட காலம் :**

ஆனால் உண்மை என்ன தெரியுமா? இந்தியாவில் காணப்படும் பெரும்பாலான மதரஸாக்கள் இல்யாஸ் சாஹிபின் தப்லீஃக் வருகைக்குப் பிறகு கடந்த 80 வருடத்திற்குள் உருவாக்கப்பட்டவையே. இந்தியாவில் ஆரம்ப மதரஸா என்று சொல்லப்படும் தேவ்பந்த் மதரஸாவே 1866ல் உருவானது தான். அதற்குப் போட்டியாக ஷிர்க்கையும், பித்அத்துகளையும் கொள்கையாகக் கொண்டு ஆரம்பிக்கப்பட்டது பரேல்வியிலுள்ள மதரஸாவாகும். தமிழகத்தின் தாய் மதரஸா என்று அழைக்கப்படும் வேலூர் பாக்கியாத் துஸ்ஸாலிஹாத் ஆரம்பிக்கப்பட்டது 1885ல் ஆகும். இப்படி விரல் விட்டு எண்ணப்படும் சில மதரஸாக்களைத் தவிர எஞ்சிய அனைத்து மதரஸாக்களும் உருவானது கடந்த 80 ஆண்டுகளுக்குள்தான் என்று உறுதிப்பட சொல்ல முடியும்.

**ஆரம்பிக்கப்பட்ட நோக்கம்:**

அடுத்து இந்த மதரஸாக்கள் ஆரம்பிக்கப்பட்ட நோக்கத்தை ஆராயும்போது, ஒருசில மதரஸாக்கள் ஒரு சிலரால் நல்லெண்ணத்துட னும் சமுதாய நலன் கருதியும் ஆரம்பிக்கப்பட்டிருந்தாலும், குர்ஆன், ஹதீஸை நிலைநாட்டும் தூய நோக்கத்துடன் ஆரம்பிக்கப்பட்டவையல்ல. எப்படி மாற்று மதங்களிலுள்ள சமுதாய நலன் கருதுவோர் நல்லெண்ணத்துடனும், குருட்டு பக்தியுடனும் தங்கள் வழிகாட்டிகள், குருமார்கள் போதித்துத் தந்த இறைவனுக்கு இணை வைக்கும் அவதார நம்பிக்கை, திரியேகத்துவ நம்பிக்கை இவற்றை அடிப்படையாகக் கொண்டு சேவையாற்றி வருகின்றனரோ, அதே போல் இவர்களும் இவர்களது வழிகாட்டிகள், உஸ்தாதுகள் (ஆசிரியர்கள்) போதித்துத் தந்த மனிதன் இறைவனுடன் இரண்டறக் கலக்க(அத்துவைதம்) முடியும் என்ற ஷிர்க்கான கொள்கையுடைய சூஃபிஸத்தை அடிப்படையாகக் கொண்டு சேவையாற்றி வருகின்றனர்.

இவர்களுக்குச் சமுதாய நலனில் அக்கறை இருந்தாலும், மக்களை நேரான வழியில் இட்டுச் செல்லும் ஆர்வமும் நல்லெண்ணமும் இருந்தாலும், இவர்கள் தங்கள் முன்னோர்கள், வழிகாட்டிகள், ஆசிரியர்கள் முதலானோர்கள் மீது கொண்டுள்ள அபாரமான குருட்டு நம்பிக்கை இவர்களை குர்ஆனுக்கும், ஹதீஸுக்கும் முரணான கொள்கைகளை ஏற்றுச் செயல்படச் செய்கிறது. இந்த வகையில் மாற்று மதங்களின் அறிஞர்களுக்கும், இவர்களுக்கும் வேற்றுமை இருப்பதாகத் தெரியவில்லை. மாற்று மத அறிஞர்களில் பலர் அவதாரக் கொள்கையில் நம்பிக்கை உடையவர்களாகவும், பலர் திரியேகத்துக் கொள்கையில் நம்பிக்கை உடையவர்களாகவும் இருப்பதைப் பார்க்கிறோம். ஆனால் இவர்களை அப்படிப்பட்ட நம்பிக்கை உடையவர்கள் என்று நாம் சொல்லவில்லை. ஆயினும் இவர்கள் நம்பிக்கை வைத்துள்ள இமாம்கள், ஷெய்குகள், உஸ்தாதுகள் முதலானோர்களின் பல கூற்றுகள் குர்ஆனுக்கும், ஹதீஸுக்கும் முரணாக இருப்பது மிகத் தெளிவாகத் தெரிந்தாலும், அந்த நாதாக்கள் எல்லாம் தவறு செய்திருக்க முடியுமா? என்ற குருட்டு நம்பிக்கையில், அவர்களின் அந்த தவறான செயல்களையும் மார்க்கமாக இவர்கள் நம்பிச் செயல்படுவதோடு மக்களுக்கும் முழுமையாக அவற்றை மார்க்கமாக இந்த மதரஸாக்களில் போதிக்கின்றனர்.

தவறு செய்யாத தனித்தன்மை அல்லாஹ்வுக்கு மட்டுமே சொந்தமானது. அதனை நபிமார்களுக்கோ, நபி தோழர்களுக்கோ, இமாம்களுக்கோ, வேறு எந்த மனிதருக்கோ சொந்தப்படுத்த முடியாது என்பதைப் புரியாமல் செயல்படுகிறார்கள். மனித வர்க்கம் அல்லாஹ்வுக்கு இணை வைக்கும் வகையில் ஆரம்பத்திலிருந்து செய்து வரும் பெரும் தவறையே இவர்களும் செய்து வருகிறார்கள்.

கிறிஸ்தவர்கள் அல்லாஹ்வின் கட்டளைக்கு மாற்றமாக தங்கள் பாதிரிகள், சந்நியாசிகள் கூறிய கூற்றுகளை மார்க்கமாக எடுத்துச் செயல்பட்டு அவர்களைத் தங்கள் இறைவனாக ஆக்கிக் கொண்டது போல், இவர்கள் தங்கள் இமாம்களையும் ஷைகுகளையும் இறைவனாக ஆக்கி குர்ஆனுக்கும் ஹதீஸுக்கும் முரண்பட்ட அவர்களின் கூற்றுக்களையும் மார்க்கமாக்கிச் செயல்படுகின்றனர். *(பார்க்க 9:31)*, தக்லீதும், தஸவ்வுஃபும் இந்த அடிப்படையிலானவையே. ஆயினும் இந்த அறிஞர்கள் இவை இரண்டிலும் பிடிவாதமாகவே நடந்து வருகின்றனர்.

*'அல்லாஹ் அனுமதிக்காத எதனையும் அவர்களுக்கு மார்க்கமாக்கி வைக்கும் இணையாளர்கள் அவர்களுக்கு இருக்கின்றனரா? (42:21)*

*'அல்லாஹ்வுக்கல்லாது ஆணை பிறப்பிக்கும் அதிகாரம் யாருக்கும் இல்லை'. (6:57,62, 12:40, 67)*

இந்த அல்குர்ஆன் வசனங்களை அவர்கள் விளங்கிச் செயல்படுவதாகத் தெரியவில்லை. மாறாக மாற்று மத அறிஞர்களிடையே தங்கள் முன்னோர்கள் மீது காணப்படும் மூடப் பக்தியே இவர்களிட

2:186, 7:3, 18:102-106 வசனங்கள்படி மவ்லவி புரோகிதர்கள் சட்ட விரோதமாக கொல்லைப்புற

மும் காணப்படுகிறது என்றே சொல்லுகிறோம்.

தப்லீஃக் பணியில் ஈடுபட்டு அதன் மூலம் ஏற் பட்ட ஆர்வம் காரணமாக சமுதாய நலன் கருதியே மதரஸாக்களைத் தொடங்கியவர்களும் இந்த தவ றான போக்கிலிருந்து விடுபட்டவர்களாக இல்லை.

'எவர்கள் மெய்யாகவே விசுவாசங் கொண்டு, தங் கள் விசுவாசத்துடன் (யாதோர்) அக்கிரமத்தையும் கலந்து விடவில்லையோ அவர்களுக்கு நிச்சயமாக அபயமுண்டு. அவர்கள் தான் நேரான வழியிலும் இருக்கின்றனர். *(6:82)*

அல்லாஹ்வின் இக்கட்டளைக்கு மாறாக தங் களை முஸ்லிம் என்று சொல்லிக்கொண்டு தங்கள் விசுவாசத்தில் அக்கிரமத்தைக் கலக்கின்றனர். தங்கள் முன்னோர்கள் மீதுள்ள குருட்டு பக்தியால் அல்லாஹ்வின் சொல்லைவிட தங்கள் முன்னோர் களின் சொல்லுக்கு முக்கியத்துவம் கொடுக்கின்ற னர். இதே தவறையே கிறிஸ்தவர்கள் செய்தனர். அதனையே தங்கள் பாதிரிகளையும் சந்நியாசிகளை யும் அல்லாஹ்வாக ஆக்கிவிட்டதாக அல்லாஹ் கூறுகிறான்' (பார்க்க: 9:31)

ஆக மதரஸாக்கள் தொடங்கியவர்களில் சிலரின் நோக்கம் நல்லதாக இருந்தாலும், கொள்கையில் கோளாறு இருக்கும் நிலையில் எஞ்சியவர்களின் நோக்கமும் சந்தேகத்திற்குரியதாகவே இருக்கிறது. தமிழகத்தில் பல மதரஸாக்களின் தொடக்கத்தை உற்று நோக்கும்போது இது புலனாகின்றது. ஒரு மதரஸாவில் பணி புரிந்து கொண்டிருக்கும்போது அவர்களுக்கும் நிர்வாகஸ்தர்களுக்குமோ... அல்லது தலைமை ஆசிரியருக்குமோ கருத்து மோதல்கள் ஏற்பட்டு தகராறு முற்றி இறுதியில் வெளியேறும் அல்லது வெளியேற்றப்படும் நிலை ஏற்பட்டால், உடன் இவர்கள் ஏதாவதொரு ஊரில் 10 அல்லது 15 மாணவர்களை வைத்துக் கொண்டு புதியதொரு மதரஸாவை ஆரம்பித்து விடுவார்கள். ரசீது புத்தகங் களை அச்சடித்துக் கொண்டு ஊர் ஊராக வசூலுக் குக் கிளம்பி விடுவார்கள். முஸ்லிம் சமுதாய மக்க ளும் தாங்கள் மார்க்கத்திற்குப் பெரிதும் உதவுவ தாகக் கருதிக் கொண்டு தாராளமாக இவர்களுக்குப் பொருள் உதவி செய்து வருகிறார்கள். அதாவது தங்கள் இவ்வுலக வாழ்க்கைத் தேவைகளுக்காக மதரஸாக்களைத் தொடங்குகின்றனர். இப்படி பல மதரஸாக்கள்.

**மவ்லூது ஓதுவதற்கென்றே மதரஸாக்கள்:**

மவ்லூது ஓதுவதை நபி(ஸல்) அவர்கள் மீது சொரியப்படும் புகழாகக் கருதிக் கொண்டு அதனை பக்தி சிரத்தையோடு ஓதுவதற்கு ஆட்கள் தேவை; மதரஸா தொடங்கி அங்கு பல மாணவர்கள் ஓதி வந்தால், மவ்லூது ஓதுவதற்கு ஆட்களைத் தேடி அலைய வேண்டியதில்லை என்ற நல்ல(?) நோக் கத்தோடு சில மாவட்டங்களில் பல மதரஸாக்கள் தொடங்கப்பட்டுள்ளன. அதாவது மவ்லூது ஓது வதற்கென்றே மதரஸாக்கள். இதுபோல் மதரஸா ஒன்றை தொடங்கிய செல்வந்தர் ஒருவர், ராதிபு ஓது வதற்கு மாணவர்கள் தேவை என்ற நோக்கத்திற் காகவே மதரஸா தொடங்கியதாகப் பெருமை பட ஒரு மவ்லவியிடமே கூறி இருக்கிறார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

ஆக இப்படித்தான் தமிழகத்தின் பெரும் பாலான மதரஸாக்கள் தொடங்கப்பட்டுள்ளன. நோக்கமே இப்படி இருக்கும்போது, அவற்றிலி ருந்து பெறப்படும் பலன் எவ்வாறு இருக்கும் என்று நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள்.

**மதரஸா செல்லும் மாணவர்களின் நிலை:**

படிப்பு அறவே ஏறாத மக்குப் பிள்ளைகள், முரட்டுப் பிள்ளைகள், வறுமையில் சிக்கி வாடும் ஏழைப் பிள்ளைகள் போன்றோரே இம்மதரஸாக் களில் படிக்கச் செல்கின்றனர். இதுவரை அரபி மதரஸாக்கள் ஆரம்பிக்கப்பட்ட நோக்கத்தையும், அவற்றில் ஓத முன் வருபவர்களின் ஆற்றலையும் விளங்கிக் கொண்டீர்கள். இனி அங்கு போதிக் கப்படும் கல்வியின் நிலையைப் பார்ப்போம்.

மதரஸாக்கள் தொடங்கப்பட்ட நோக்கம் இவ் வாறு இருக்க அவற்றில் ஓதப்போகும் மாணவர் களின் (சில வருடங்களுக்குப் பின் மவ்லவிகள்) நிலையைப் பற்றி அடுத்துப் பார்ப்போம். அவர்களில் பெரும்பாலோர் பள்ளிக்கூடங்களில் பலமுறை ஃபெயிலாகி, இனி இவனுக்குப் படிப்பு ஏறவே ஏறாது. வேறு போக்கே இல்லை என்ற நிலை வரும் போது தான் இந்த அரபி மதரஸாக்களின் ஞாபகமே வரும். அப்படிப்பட்ட பிள்ளைகளையே இந்த மத ரஸாக்களுக்கு அனுப்பி வைப்பர் பெற்றோர்கள்.

பொதுவாகக் கல்வி நிலையங்களில் காணப் படும் ஆற்றலுள்ள மாணவர்களைத் தேர்ந்தெடுக் கும் பரீட்சை முறை எதுவும் இம்மதரஸாக்களில் இல்லை. காரணம் இம்மதரஸாக்கள் மக்கள் தரும் தருமத்தைக் கொண்டு (மார்க்க முரணான சாராயம், வட்டி, லாட்டரி போன்ற தொழில் களைக் கொண்டு பொருளீட்டுபவர்களிடமும் எவ்வித கூச்சமும் இல்லாமல் வசூல் செய்வது தனி விஷயம்) நடத்தப்படுவதால், அந்த மக்களிடம் காட்டும் அளவுக்குத் தலைகள் இருந்தால் போதும். திறமை சாலிகளைத் தேர்ந்தெடுப்பதாக இருந்தால் அது சாத்தியமில்லை என்பது ஒரு பக்கம்.

மறுபக்கம் கல்லூரிகளில் போல படிப்புக்குப் ஃபீஸ் கட்டி, சாப்பாட்டுக்கும், தங்கவும் பணம் கட்டி படிக்கும் நிலை இல்லை. அப்படி ஒரு நிலை இருக்குமானால் யாரும் இந்த மதரஸாக்களை எட்டிப் பார்க்கமாட்டார்கள். அப்படிப்பட்ட தரமான(?) பாடத் திட்டத்தையே இம்மதரஸாக் கள் கொண்டுள்ளன. இதனை நாம் 'ஸில்ஸிலயே நிஜாமிய்யா' என்ற தலைப்பில் விளக்கியுள்ளோம்.

எனவே இந்த மதரஸாக்களில் எப்படிப்பட்ட மாணவர்கள் ஓத வருகிறார்கள் தெரியுமா? சுருக்க மாகச் சொல்லுவதாக இருந்தால் ஓசிச் சாப்பாடும் உறைவிடமும் கிடைப்பதால் பயனில்லாத படிப் பைப் படிக்க வேறு போக்கில்லாத மாணவர்களே வருகிறார்கள். திறமையுள்ள மாணவர்கள் டாக் டர், என்ஜினியர் மற்றும் பட்டப் படிப்புகளுக்குச்

இடுக்கு வழியாக திருட்டுத்தனமா புகுந்து கொண்ட திருடனிலும் கேடுகெட்ட திருடர்களாவார்கள்!

சென்று விடுகின்றனர். கல்லூரிப் படிப்புப் படிக்கும் ஆற்றல் சிறிது இருந்தாலும் அவர்கள் ஏழையாக இருந்தாலும் நாலு பேரிடம் சொல்லி அவர்களின் உதவியுடன் படிக்கவே செல்கின்றனர்.

அப்படிப் படிக்க வசதி கிடைக்காவிட்டாலும், கடைகளிலோ, தொழிற்சாலைகளிலோ சிறிய வயதிலேயே போய்ச் சேர்ந்து முன்னுக்கு வரவே முயற்சி எடுக்கின்றனர். மதரஸா போய் ஓதுவதை நினைத்துக் கூடப் பார்ப்பதில்லை. மவ்லவிகளில் பலர் தங்கள் மக்களை மதரஸாக்களுக்கு அனுப்பாமல் கல்லூரிப் படிப்புக்கே அனுப்பி வைக்கின்றனர் என்பதே உண்மையாகும். இதிலிருந்து அந்த மவ்லவிகளும் தங்களின் மவ்லவி படிப்பின் தரத்தை அறிந்தே வைத்துள்ளனர் என்பது புலனாகும். மதரஸாக்களில் சில காலம் போக்கிவிட்டு மவ்லவிகளாக வெளி வருபவர்களுக்கு கத்தம் ஃபாத்திஹா ஓதுவதையும், பள்ளிகளில் இமாமாகப் பணி புரிவதையும் தவிர வேறு போக்கில்லை என்பதே உண்மையாகும்.

மிஞ்சிப் மிஞ்சிப் போனால் இந்த உதவாக்கரை மதரஸாக்களில் ஆசிரியராகப் பணி புரியும் வாய்ப்புக் கிடைக்கும். மற்றபடி அரபியில் பேசவோ, அரபி நூல்களைப் படித்துச் சொல்லவோ, அரபு நாடுகளிலிருந்து வரும் விஸாக்கள் பற்றிய விபரத்தைக் கூட படித்துச் சொல்லவோ இந்த மவ்லவிகளில் பெரும்பாலோருக்கு ஆற்றல் இல்லை என்பதே உண்மையாகும். ஆக அறிவுக்கும், அவர்களுக்கும் சம்பந்தமே இல்லாதவர்கள், எத்துறையில் ஈடுபட்டும் முன்னுக்கு வர முடியாதவர்கள், வீட்டுக்கும் ஊருக்கும் அடங்காத முரட்டுப் பிள்ளைகள் இத்தரம் வாய்ந்தவர்களே வேறு போக்கின்றி இன்றைய மதரஸாக்களில் போய் தஞ்சம் புகுகின்றனர். தப்லீஃ பணியால் கவரப்பட்டுப் பக்தி பரவசத்தால் தங்கள் பிள்ளைகளை அரபி மதரஸாக்களுக்கு அனுப்புபவர்களும் உண்டு. இந்த மாணவர்களில் சிறிது அறிவுக் கூர்மையுடையவர்கள் தங்களது தந்தைமார் நிர்ப்பந்தித்தாலும், மதரஸாக்களின் நடைமுறைகளைச் சரி காணாமல் இடையில் வெளியேறி விடுகின்றனர். ‘தந்தை சொல் மிக்க மந்திரமில்லை’ என்பதைத் தலை மேல் கொண்டு தந்தை எதைச் சொன்னாலும் (அவை மார்க்க முரணான, ஷிர்க்கான காரியங்களாக இருந்தாலும்) அதை அப்படியே ஏற்றுச் செயல்படுகிறவர்கள் மட்டுமே மதரஸாவில் இருந்து காலத்தை ஓட்டிவிட்டு மவ்லவி பட்டத்துடன் வெளி வருகின்றனர். தந்தை சொல்லை அப்படியே சிந்திக்காது ஏற்றவர்கள் இப்போது தங்கள் ஆசிரியரின் (உஸ்தாது) சொல்லை அப்படியே கண்ணை மூடிக்கொண்டு ஏற்றுச் செயல்பட்டு வருகின்றனர். இதே அடிப்படையில் தான் ஒரு மவ்லவி

“இந்நிகழ்ச்சியை என்னுடைய கண்ணியமிகு உஸ்தாது சொல்லக் கேட்டுள்ளேன். நான் நூறு கிதாபைப் பார்ப்பதை விட அது மிகப் பெரிய ஆதாரமாகும்.”

என்று கூறிக் கொண்டு 1ல் 1/2 + 1/3 போக எஞ்சியுள்ளது 1/9 என்று கண்மூடித்தனமாகச் சாதித்தது வாசகர்களுக்கு ஞாபகம் இருக்கும். அதாவது 1/2+1/3+1/9 = 17/18 அல்ல. முழுமையாக 1 ஆகும் என்பதே அந்த மவ்லவியின் அறியாமை வாதமாகும். இது அவர் தனது உஸ்தாது மீது வைத்த குருட்டு பக்தி யால் விளைந்த விளைவு! இந்த மவ்லவிதான் தமிழ கத்திலுள்ள தலைசிறந்த விரல் விட்டு எண்ணப்படும் மவ்லவிகளில் ஒருவர் என்றால் மற்ற மவ்லவிகளின் தரத்தை நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள்.

**அறிவீனர்களைத் தேர்ந்தெடுப்பதற்கென்றே விதி முறைகள்:**

எப்படிப்பட்ட தரத்தை உடையவர்கள் இந்த அரபி மதரஸாக்களுக்கு ஓதப் போகின்றனர் என்பதைப் புரிந்து கொண்டீர்கள். இன்னும் கேளுங்கள் வேடிக்கையை. அரபி மதரஸாக்கள் அல்லாத மற்ற கல்வி ஸ்தாபனங்கள் திறமையிலும் திறமை மிக்க மாணவர்களைத் தேர்ந்தெடுக்கும் முறைகளைக் கையாள்வார்கள். ஆனால் இந்த அரபி மதரஸாக்களோ அறிவீனத்திலும் அறிவீனமான மாணவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் செயல்படுவார்கள் போலும். ஏற்கனவே எல்லாத் துறைகளிலும் ஒதுக்கப்பட்டு எதற்கும் லாயக்கற்றவர்களே அரபி மதரஸாவைப் போய் அடைகின்றனர். அவர்களிலும் தப்பித் தவறி அறிவுடையவர்கள் இருந்து விடக் கூடாது. அவர்களையும் கழித்துக்கட்ட வேண்டும் என்ற நோக்கத்துடன் மதரஸாவின் விதிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. மதரஸாவில் நுழைந்தவுடன் முதல் நிபந்தனை மொட்டை அடித்துத் தொப்பி போட வேண்டும். ஜுப்பா போடவேண்டும். இந்த விதிகளை எங்கிருந்து பெற்றனர் என்பதை நாம் அறியோம். நபி(ஸல்) அவர்கள் தங்கள் வாழ் நாளிலேயே ஹஜ்ஜில் வைத்துத்தான் மொட்டை அடித்ததாக ஆதாரங்கள் இருக்கின்றன. அபா என்ற ஜுப்பா போடுவது நபி(ஸல்) அவர்களின் ஆதத்தில் இருந்திருக்கிறதேயல்லாமல் ஏவப்பட்ட சுன்னத்து அல்ல. இந்த நிலையில் அவற்றைக் கடமையாக்கப் பட்ட காரியங்கள் போல் ஏன் கடைபிடிக்கப்படுகிறது?

வேறு வழியில்லாது மதரஸாக்களில் ஓத வருபவர்களில் சிலர் இந்த நிபந்தபனைகளை ஏற்றுக் கொள்ள முடியாமல் ஓடிப் போய் விடுவதும் உண்டு. வெளியேறினால் தங்கள் சாப்பாட்டிற்கு வேறு வழியில்லை என்ற நிலையிலுள்ள மாணவர்களே இறுதியில் எஞ்சுகின்றனர். அவர்கள் விடுமுறையில் வெளியில் செல்லும்போது ஜுப்பா அல்லாத சட்டைகளில் அவர்கள் காட்டும் ஆர்வம். தலைமுடி சிறிது வளர்ந்தவுடன் அவற்றைச் சீவி அழகு பார்க்கும் அவர்களின் ஏக்கம் இவை அவர்கள் எப்படிப்பட்ட நிர்ப்பந்த நிலைகளில் மதரஸாக்களில் ஓதி வருகின்றனர் என்பதைப் புரிய வைக்கும். ஆக ஆரம்ப நிலையிலேயே அவர்களின் சுய சிந்தனை, சுயவிருப்பம் மழுங்கடிக்கப்பட்டு உஸ்தாதுகள் சொல்வதை வேதவாக்காகக் கொண்டு செயல்படும் நிலை உருவாக்கப்படுகின்றது.

**திறமையற்றவர்களாக ஆக்குவதற்கென்றே பாட போதனை:**

திறமையற்றவர்களைத் தேர்ந்தெடுப்பதில் இது

திருடன் மக்களின் சாமான்கள் மட்டுமே திருடுவான்; மௌலவி புரோகிதர்களோ

இரண்டாவது கட்டம். இந்த இரண்டு தேர்வு களையும் மீறி சுயசிந்தனை உடையவர்கள் தப்பித் தவறி தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கலாம் என்ற ஐயம் இவர்களுக்கு இன்னும் எஞ்சி இருக்கும் போலும். எனவே அவர்களது சுய சிந்தனையை மேலும் மழுங்கச் செய்யும் முறையில் விஷேஷமான ஒரு பாடத் திட்டமாக மாணவர்களுக்கு ஒழுக்கம் கற் பிப்பதற்கென்றே ஒரு நூல் உண்டு. அதன் பெயர் 'தஃலீமுல் முதஅல்லிம்" அதன் பொருள்: "மாணவர் களுக்கான போதனை". இந்த நூலில் மாணவர்கள் தங்கள் உஸ்தாதுகளின் மீது அளவு கடந்து பக்தி செலுத்தும் வகையில் கற்பனையாகப் பல கதைகள் புனையப்பட்டுள்ளன. அதில் ஒன்று வருமாறு.

ஒரு உஸ்தாது தனது மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொண்டிருக்கிறார். அப்போது அவர் உட்காருவதும், எழும்புவதுமாக டிரில் செய்து கொண்டிருக்கிறார். மாணவர்கள் ஆச்சரியப்பட்டு அதற்குரிய காரணத்தைக் கேட்டார்களாம். அதற்கு அந்த உஸ்தாது கொடுத்த விளக்கத்தைப் பாருங்கள். அதாவது 'எனக்குப் பாடம் சொல்லிக் கொடுத்த உஸ்தாதின் மகன் மைதானத்தில் கால்பந்து விளை யாடிக் கொண்டிருக்கிறார். அவர் இந்தப் பக்கம் வரும்போது எனது பார்வையில் படுகிறார். எனது உஸ்தாது மீதுள்ள பக்தியால் அவரது மகனைப் பார்த்த உடன் மரியாதைக்காக எழும்புகிறேன். எனது உஸ்தாதின் மகனுக்கு மரியாதை செய்வது எனது உஸ்தாதுக்கு மரியாதை செய்வது போலா கும்" என்று விளக்கம் தந்துள்ளாராம். சிரிப்பு வருகி றதா? நன்றாகச் சிரியுங்கள். இந்தக் கற்பனைக் கதை யையும் கேட்டுவிட்டு அந்த மாணவர்கள் அந்த உஸ்தாதைப் போல் தங்கள் உஸ்தாதுக்கு மரியாதை செய்ய முற்படுகின்றனர் என்ற முடிவுக்கு நீங்களே வாருங்கள். உஸ்தாதுகளுக்கெல்லாம் பெரிய உஸ் தாது நபி(ஸல்) அவர்களேயாகும். அவர்கள் வரும் போது கூட நபிதோழர்கள் எழுந்து மரியாதை செய்தது இல்லை. காரணம் அப்படி எழுந்து மரியாதை செய்வதை நபி(ஸல்) அவர்கள் விரும்ப வில்லை. மாறாகத் தடுத்துள்ளார்கள்.

*"(சஹாபாக்களாகிய) அவர்களுக்கு நபி(ஸல்) அவர்களை விட அதிக விருப்பமுள்ள மனிதர் எவரும் இருந்ததில்லை. இந்நிலையில் சஹாபாக் கள் நபி(ஸல்) அவர்களைப் பார்த்து விட்டால் எழுந்து நிர்ப்பவர்களாக இருந்து கொண்டிருக்க வில்லை. ஏனெனில் அவ்வாறு அவர்கள் எழுந்து நிற்பதை நபி(ஸல்) அவர்கள் வெறுக்கிறார்கள் என்பதை அவர்கள் உணர்ந்திருந்தார்கள்.'*

*(அனஸ்(ரழி), திர்மிதி)*

இந்த நிலையில் நபி(ஸல்) அவர்களின் போதனைக்கும், நடைமுறைக்கும் மாறாகக் குருட்டுத் தனமான குருபக்தியை வளர்க்கும் இவர்கள் குர்ஆன் ஹதீஸ்படி நடக்கிறார்களா? அல்லது மாற்று மத அறிஞர்களைப் போல் மனிதனை தெய்வமாக்கும். இணைவைக்கும் கொள்கையை வளர்க்கத் துணை போகிறார்கள்? என்று நிதான மாகச் சிந்தித்துப் பாருங்கள்.

இப்படி முறை தவறிய குருபக்தியை வளர்க்கும் பல கற்பனைக் கட்டுக் கதைகள் அந்த ஒழுக்கம் கற்பிக்கும் நோக்கத்தோடு போதிக்கப்படும் 'தஃலீமுல் முதஅல்லிம்' என்ற நூலில் காணப்படு கின்றன. அவை பற்றிய மேலதிக விளக்கத்திற்கு பார்க்க அல்ஜன்னத் மார்ச் 90, பக்கம். 3. இந்த நூலி லுள்ள போதனைகளை அப்படியே கண்ணை மூடிக் கொண்டு ஏற்றுக் கொண்டதன் விளைவே பிரபல மான மவ்லவி 'எனது உஸ்தாது சொல்லுவது நூறு கிதாபைப் பார்ப்பதைவிட மிகப் பெரிய ஆதார மாகும்' என்று கூறி வருவதாகும்.

இன்னொரு சம்பவம். மதரஸாவின் ஒரு வகுப் பறையில் பாடம் நடந்து கொண்டிருக்கிறது. உஸ்தாது ஒரு கிதாபை வைத்துப் பாடம் நடத்திக் கொண்டிருக்கிறார். ஒரு மாணவர் ஒரு நூலின் சில பாராக்களுக்கிடையே காணப்படும் ஆண்டுகளின் எண்ணிக்கைப் பற்றிய தவறைச் சுட்டிக்காட்டி விளக்கம் கேட்டிருக்கிறார். விளக்கம் கொடுக்கக் கடமைப்பட்ட உஸ்தாதுக்கு வந்ததே கோபம். அத்தப் பெரிய மேதை எழுதிய நூலாகும். அதில் நீ குறை காண்பதா? என்று ஆத்திரத்தோடு கத்திக் கொண்டு கையில் வைத்திருந்த கிதாபை அந்த மாணவரின் முகத்தை நோக்கி வீசினாரே பார்க்க லாம். வெள்ளை வெளேர் என்று தெள்ளத் தெளி வாக எண்ணிக்கையில் காணப்பட்ட தவறைச் சுட் டிக் காட்டி விளக்கம் கேட்ட மாணவருக்குக் கிடைத்த பரிசைப் பார்த்தீர்களா? 4+3=7 என்ப தற்கு பதிலாக அந்த நூலில் 8 என்று எழுதப்பட்டி ருந்தாலும் அந்த நூலை எழுதிய மேதையின் மீது அப்படியே குருட்டு நம்பிக்கை வைத்து அதனை 8 என்று ஏற்றுக் கொள்ள வேண்டும். ஏழு தானே என சந்தேகமோ, மறுப்போ கிளப்பக் கூடாது. இப் படிப்பட்ட குருட்டு குரு பக்தியை ஏற்றுக் கொண் டவர்களே இந்த மதரஸாக்களில் தொடர்ந்து ஓத முடியும். இல்லை என்றால் வெளியேறிச் சாப்பாட் டிற்குத் திண்டாட வேண்டியதுதான். அல்லது மஸ்ஜிதுகளில் சென்று சுயமரியாதையை விட்டு பிச்சை எடுக்க வேண்டியதுதான். ஆக இந்த மூன்றா வது வடிகட்டலின் மூலம் முற்றிலும் சுய சிந்தனை யற்றவர்களைத் தேர்ந்தெடுத்துக் காலத்தை மதர ஸாவில் கழிக்கச் செய்து அவர்களுக்கு மவ்லவி ஆலிம்(?) பட்டம் கொடுத்து வெளியே அனுப்பு கிறார்கள். அவர்களிடம் நீங்கள் எப்படி சுய சிந்தனையை எதிர்பார்க்க முடியும்? குதிரைக் கொம்புதான்.

**மதரஸா கல்வித் திட்டம்:**

அரபி மதரஸாக்களின் கல்வித் திட்டம் எந்த அடிப்படையில் அமைந்துள்ளது என்பதை 'ஸில்ஸிலயே நிஜாமிய்யா' என்ற தலைப்பில் விளக்கி இருந்தோம். மீண்டும் ஒருமுறை அதனை நிதானமாகப் படித்துப் பார்க்கும்படி அன்புடன் வேண்டுகிறோம்.

'ஸில்ஸிலயே நிஜாமிய்யா' கல்வித் திட்டப்படி குர்ஆனுக்கும், ஹதீஸுக்கும் முக்கியத்துவம் கொடுப் பதை விட வாதக்கலைக்கும், பிக்ஹின் பெயரால் முன்னோர்களின் கூற்றுக்களுக்கும் முக்கியத்துவம் கொடுப்பதும் வலியுறுத்தப்படுகிறது. ஹனபி பிக்ஹு நூல்களில் ஒரு விஷயத்தில் இமாமின் கூற்று குர்

மக்களின் ஈமானையும்(இறை நம்பிக்கை) சாமான்களையும் சேர்த்தே திருடுகிறார்கள்!

ஆனுக்கோ, ஹதீஸுக்கோ முரணாகத் தெரிந்தாலும் இமாமின் கூற்றையே எடுத்து நடக்க வேண்டும் என்று எழுதி வைக்கப்பட்டுள்ளது என்றால் அதன் பொருள் என்ன? உண்மையில் அந்த விஷயத்தை இமாம் அபூ ஹனீபா(ரஹ்) அவர்களும் கூறி இருக்க மாட்டார். முன்னூறு வருடங்களுக்கு முன் இருந்த ஹனபி மத்ஹபின் இமாம் ஒருவர் அவ்வாறு கூறி இருப்பார். அது இப்போது சுமார் 1300 வருடங்களுக்கு முன்னால் வாழ்ந்த இமாம் அபூ ஹனீபா (ரஹ்) அவர்களின் பெயரால் அரங்கேற்றப் படுகிறது.

இந்த மதரஸாக்களின் பாடத்திட்டத்தில் இன்னொரு வேடிக்கையையும் பார்க்கலாம். அதாவது எந்த விஷயங்களில் மனித அபிப்பிராயங்கள் செல்லாதோ-குர்ஆன், ஹதீஸை மட்டும் வைத்து முடிவு செய்ய வேண்டுமோ –1434 வருடங்களுக்கு முன் இருந்த நிலையில் எவ்வித மாற்றமும் இல்லாது எடுத்து நடக்க வேண்டுமோ, அப்படிப்பட்ட மார்க்க விஷயங்களில் சுமார் 300 வருடங்களுக்கு முன் வாழ்ந்த ஒரு இமாமின் கூற்றை இமாம் அபூ ஹனீபா(ரஹ்) அவர்களின் பெயரால் அரங்கேற்றம் செய்வார்கள். அதே சமயம் மாற்றங்களுக்குரிய உலக விவகாரங்களில் விஞ்ஞான வளர்ச்சியின் காரணமாகக் கண்டு பிடிக்கப்படும் எதார்த்த நிலைகளை இன்றுள்ள விஞ்ஞானிகள் சொல்லுவதை ஏற்றுக் கொள்ளாமல் சுமார் 600 அல்லது 700 வருடங்களுக்கு முன், சில இமாம்களின் யூகத்தால் எழுதி வைக்கப்பட்டுள்ள விஷயங்களில் முழு நம்பிக்கை வைத்து அதனையே இன்றும் போதிக்கிறார்கள்.

உதாரணமாக வானம், பூமி சம்பந்தப்பட்ட விஷயங்களை விளக்கும் ஒரு நூல் (தஷ்ரீக்குல் அஃப்லாக்) அரபி மதரஸாக்களில் போதிக்கப்படுகிறது. அதில் பூமி தட்டையானது. சூரியன் பூமியைச் சுற்றி வருகிறது போன்ற அபத்தங்கள் (சுமார் 600 அல்லது 700 வருடங்களுக்கு முன் மக்களிடையே இருந்த தவறான நம்பிக்கை) எழுதப்பட்டுள்ளன. அதனையே இந்த மதரஸாக்களில் இன்றும் போதிக்கின்றனர். எனவே இன்றைய மவ்லவிகளில் பலரும் இன்றும் பூமி தட்டை என்றே சொல்லி வருகின்றனர். பிறையைப் புறக்கண்ணால் பார்த்து முதல் பிறையை தீர்மானிப்பதும் இதே மூட நம்பிக்கையால்தான். இப்படிச் சாதாரண உண்மைகளைக் கூட ஏற்றுக் கொள்ள அவர்கள் தங்கள் முன்னோர்கள்மீது கொண்டுள்ள குருட்டு நம்பிக்கை இடம் கொடுப்பதில்லை. முன் சென்ற நாதாக்கள் எல்லாம் சாமான்யப்பட்டவர்களா? அவர்களைப் போல் நாம் ஆக முடியுமா? அவர்கள் வானத்தை வில்லாக வளைத்தார்கள். மணலைக் கயிறாகத் திரித்தார்கள் என்றெல்லாம் சரடு விடுவார்கள். இந்தப் புளுகு மூட்டைகளை எல்லாம் அப்படியே நம்பிச் செயல்படுகிறவர்கள் மட்டுமே அரபி மதரஸாக்களில் காலத்தை ஓட்ட முடியும். இது மட்டுமல்ல அரபி மதரஸாக்களில் ஓதுபவர்களின் ஒழுக்கத்தைக் கெடுப்பதற்கும் அவர்களுடைய பிக்ஹு நூல்களில் சட்டம் வகுத்து வைத்திருக்கிறார்கள். அந்த அசிங்கங்களை எல்லாம் 1986 நவம்பர் அந்நஜாத் இதழில் விளக்கியுள்ளோம்.

"ஒருவன் தனது ஆண் குறியைத் தனது பின் துவாரத்தில் நுழைத்தால் குளிப்பு கடமையாகாது' போன்ற உலகத்திலேயே நடக்க முடியாத காரியங்களுக்கெல்லாம் தீர்ப்புகளை (ஃபத்வா) இவர்களது பிக்ஹு நூல்களில் பார்க்கலாம்.

"ஒருவன் விந்து வரும்போது தனது குறியை அழுத்தமாகப் பிடித்துக் கொண்டு ஆசை அடங்கியதும் விந்தை வெளிப்படுத்தினால் அவன் மீது குளிப்பு கடமை இல்லை".

இதுவும் அரபி மதரஸாக்களில் ஓதிக் கொடுக்கப்படும் பிக்ஹு நூல்களில் உள்ளது தான். இப்படிப்பட்ட விஷயங்களை 15 வயதிற்கும் 20 வயதிற்கும் உட்பட்ட வாலிபர்களிடையே போதிக்கும் போது என்ன விளைவு ஏற்படும் என்று சிந்தித்துப் பாருங்கள். அவர்கள் அவற்றைச் செயல்படுத்த ஆரம்பித்து விடுகிறார்கள். இரவில் செயல்படுத்திவிட்டு, குளிக்காமலேயே பஜர் தொழுவதற்கு சட்டம் வகுத்துக் கொடுத்திருக்கிறார்கள் முகல்லிதுகள் தங்கள் பிக்ஹு நூல்களில். இதுமுற்றி ஓரினப் புணர்ச்சிக்கு இந்த வாலிபர்கள் ஆளாகிறார்கள். கல்லூரிகளில் காணப்படுவதைவிட அரபி மதரஸாக்களில் இந்த கூடா ஒழுக்கம் அதிகமாக இருக்கிறது.

**நம்மில் ஏற்பட்ட பெரும் மாற்றத்திற்குக் காரணம்:**

நம்மைத் திடுக்கிட வைத்து, இந்த அளவு சிந்திக்க வைத்து குர்ஆன், ஹதீஸின் உண்மை நிலைகளை கண்டறிய வைத்ததே மதரஸாக்களில் காணப்படும் இந்த கூடா ஒழுக்கம்தான். 1963 முதல் 1969 வரை இந்த மவ்லவிகளுக்கு அபாரமான மரியாதை செலுத்தி வந்தோம். பெற்று வளர்த்து ஆளாக்கிய பெற்றோரை விட இந்த மவ்லவிகளை மதித்து நடந்தோம். மவ்லவிகளின் கூற்றுக்கள் அனைத்தையும் வேதவாக்காக எடுத்து நடந்தோம். இவர்களது வாக்கை நம்பி சூஃபிஸ வாழ்க்கையை மேற் கொண்டோம். 21 வயதில் காடா துணியால் கைலி, ஜுப்பா அணிந்தோம். மொட்டை அடித்தோம். முக்தி பெறுவதற்கு வீட்டைத் துறக்க வேண்டும் என்ற குருட்டு நம்பிக்கையில் காலில் கட்டையை மாட்டிக் கொண்டு வீட்டைத் துறந்து வெளியேறினோம்.

அப்படிப்பட்ட நிலையில் 1969ல் மக்கள் வலியுல்லாஹ்க்கள் என்று சொல்லிக் கொண்டிருந்த சில மவ்லவிகளிடமும் இந்த கூடா ஒழுக்கம் இருக்கிறது என்பது தெரிய வந்ததும் நம்மால் ஜீரணிக்கவே முடியவில்லை. ஆரம்பத்தில் இதனை நம்மால் நம்பவே முடியவில்லை. இச்செய்தியைக் கொண்டு வந்தவரை ஏசி விரட்டி விட்டோம். பின்னர் ஆதாரப்பூர்வமாக உரிய சாட்சிகளுடன் இன்னொரு மவ்லவி மூலமாகவே நம்மிடம் இச்செய்தி கொண்டு வரப்பட்டு உண்மைப் படுத்தப்பட்டவுடன் நம்மால் மறுக்க முடியவில்லை.

தனிப்பட்ட ஒருவரைப் பற்றிக் கிடைத்த செய்தியை வைத்து நாம் முடிவு செய்யவில்லை. பல செய்திகள் தெரிய வந்து பொதுவாக இன்றைய பெரும்பாலான மதரஸாக்களின் நிலையே இதுதான் என்று

பிறரது உபதேசங்களைக் கேட்கவிடாமல் தடுப்பவர்கள் தாஃகூத் என்ற மனித ஷைத்தான்களே!

தெரிய வந்தபின் தான் நமது மூளை வேகமாக வேலை செய்ய ஆரம்பித்தது. இதற்குப் பரிகாரம் என்ன என்று ஆராய்ந்தோம். இது விஷயமாகப் பல மவ்லவிகளைக் கலந்தோம். இன்று நம்மைக் கடுமையாகச் சாடிக் கொண்டிருக்கும் மவ்லவிகளில் நாம் கலந்து பேசிய மவ்லவிகளும் மதரஸா நிர்வாகத்தில் இருக்கிறார்கள். (அவசியப்பட்டால் அவர்கள் பெயரை வெளியிடவும் அல்லாஹ் மீது ஆணையிட்டுக் கூறவும் தயாராக இருக்கிறோம்) அன்று அவர்களை அணுகிப் பேசும்போது அதனை ஒரு பாரா தூரமான விஷயமாகவே அவர்கள் நினைக்கவில்லை. ஒரு ஈ மேனியில் அமர்ந்தது, பின்னர் பறந்து போய்விட்டது என்பது போல் அவர்களின் பேச்சு இருந்தது. அவர்களின் பேச்சு நமக்குக் கீழ்வரும் ஹதீஸை நினைவுபடுத்தியது.

"நிச்சயமாக ஒரு மூமினானவர், மலையின் கீழ் ஒருவர் அமர்ந்து கொண்டு அது தம்மீது விழுந்து விடும் என்பதை பயந்து கொண்டிருப்பவரைப் போன்று தமது பாவங்களைப் பற்றிக் கருதிக் கொண்டிருப்பார். ஆனால், ஒரு பாவியானவன் தனது பாவங்களைப் பற்றி அவன் மூக்கின் அருகில் பறந்து செல்லும் ஓர் ஈயைப் போன்றது என நினைத்து அதைத் தன்னை விட்டும் தனது கையால் ஓட்டி விடலாம் என்று கருதிக் கொண்டிருக்கிறான்.' (இப்னு மஸ்ஊத் (ரழி) புகாரீ)

இந்த மவ்லவிகளின்மீது நமக்கிருந்த நம்பிக்கை வீணான பின்பே நாம் சுயமாகச் சிந்திக்க ஆரம்பித்தோம். 12 வருடங்களுக்குப் பிறகே நேரடியாக குர்ஆன் ஹதீஸை புரட்ட ஆரம்பித்தோம். உண்மை நிலையைக் கண்ட றிந்தோம். இந்த மதரஸாக்களில் இவர்கள் கடைபிடித்து வரும் பாடத் திட்டமே இவர்களை இப்படித் தவறான வழியில் இட்டுச் செல்கிறது என்பதை அறிந்து அதனையும் தெளிவாக அவர்களிடம் எழுத்து மூலமாக எடுத்து வைத்தோம். நமது முயற்சிகள் எல்லாம் விழலுக்கு இறைத்த நீர் போல் ஆனது. அதன் பின்னரே பொது மக்களை அணுகி உண்மை மார்க்கத்தை எடுத்துச் சொல்ல ஆரம்பித்தோம். இதுவரை மௌனம் சாதித்த மவ்லவி வர்க்கம் ஆர்த்தெழுந்தது. பொதுமக்களிடம் கலப்படமே இல்லாத பொய்களைக் கூறி மக்களை நமக்கெதிராகத் தூண்டும் முயற்சியில் இறங்கினர். நம்மைக் குழப்பவாதி என்றும், இமாம்களை அவமதிப்பதாகவும் பொய் கூறி பொதுமக்களின் கோபத்தை நமக்கு எதிராகக் கிளப்பி விட்டனர்; சத்தியத்தை மறைக்க இந்த அளவு துணிந்த பின்னரும் இவர்களை மக்களுக்கு அடையாளம் காட்டாமல் நாம் எப்படி மௌனம் சாதிக்க முடியும்?

**பொறுமைக்கும் ஓர் எல்லை உண்டல்லவா?**

இந்த மவ்லவிகளால் மக்கள் முன் சத்தியத்தை எடுத்து வைக்க முடியவில்லை. 'நாங்கள் பொதுமக்களின் தயவில் வாழ்கிறோம். உண்மையைச் சொன்னால் எங்கள் பிழைப்பில் மண் விழுந்துவிடும். எங்கள் வீட்டு அடுப்பில் பூனை தூங்க ஆரம்பித்து விடும்' என்று சொல்லுகிறார்கள். அந்தச் சத்தியத்தை நாங்கள் எடுத்து வைக்கும்போது எங்களுக்கு உதவி செய்யா விட்டாலும் உபத்திரமாவது செய்யாமல் இருக்க வேண்டுமே? அதற்கு மாறாக எங்கள் மீது அவதூறுகளை அள்ளிச் சொரிந்து பொது மக்களை எங்களுக்கெதிராகத் தூண்டி சத்தியத்தை மறைக்க முனையும்போது, அந்த மவ்லவி வர்க்கத்தை அவர்களின் தரத்தை, அவர்களின் இழி நிலையை அடையாளம் காட்டாமல் சத்தியத்தை நிலைநாட்டக் கடமைப்பட்ட எங்களால் எப்படி இருக்க முடியும்? அதன் விளைவே இந்த ஆக்கம்.

இதன் பின்பாவது அவர்கள் உண்மையை உணர்வார்களாக. எங்களது கூற்றுக்கள் குர்ஆனுக்கும் ஹதீஸுக்கும் முரணாக இருந்தால் ஆதாரத்துடன் எடுத்துத் தரட்டும். அதனை ஏற்றுக் கொள்வதில் முன்னணியில் நாங்கள் இருப்போம். அதில் சந்தேகமே இல்லை. வீண் அவதூறுகளையும், அபாண்டங்களையும் சொல்லுவதை விட்டும் அவர்கள் விலகிக் கொள்ளட்டும். அல்லாஹ்வுக்குப் பயந்து சத்தியத்தை உணர்ந்து செயல்பட முன்வரட்டும். அவர்கள் சத்தியத்தை மறைக்க பெரும் முயற்சிகள் செய்வதால் அவர்களை மக்களுக்கு அடையாளம் காட்டுகிறோ மேயல்லாமல், தனிப்பட்ட முறையில் அவர்கள் மீது எங்களுக்குக் கோபமோ, குரோதமோ இல்லை.

ஆக இன்றைய மதரஸாக்களில் போதிக்கப்படும் பிக்ஹு நூல்களில் எழுதி வைக்கப்பட்டுள்ள அசிங்கங்கள் அங்கு ஓதிவரும் வாலிபர்களைப் பிஞ்சிலேயே பழுக்க வைத்து வீணாக வழி வகுக்கின்றன. அதன் விளைவு மதரஸா காலத்தோடு இக்கூடா ஒழுக்கம் ஒழிவதில்லை. இவர்களின் வெளியுலக வாழ்விலும் இது தொடர்கிறது. அவர்கள் மஸ்ஜிதுகளில் இமாமாகப் பணி புரியும் காலத்திலும் இக்கூடா ஒழுக்கத்தைச் செயல்படுத்தி மதரஸா பக்கமே செல்லாத சிறார்களையும் கெடுத்து வருகின்றனர். இக்கூடா ஒழுக்கம் எந்த அளவு இந்த மவ்லவிகளை ஆட்டிப் படைக்கிறது என்பதற்கொரு ஆதாரம்.

இந்த ஆக்கத்தைத் தயார் செய்து கொண்டிருக்கும் காலகட்டத்தில் திருச்சியிலுள்ள ஒரு மஸ்ஜிதில் இமாமாகப் பணிபுரிந்த ஒரு மவ்லவி ஒரு சிறுவனிடம் தவறாக நடந்து கையும் மெய்யுமாய் பிடிபட்டு உடனடியாகச் சீட்டுக் கிழிக்கப்பட்டு வீட்டுக்கு அனுப்பி வைக்கப்பட்டார். பலர் பார்க்க கையும் மெய்யுமாய் பிடிபட்டதால் வேறு வழியின்றி இந்த நடவடிக்கையை எடுத்துள்ளனர். இல்லை என்றால் மூடி மறைத்து விடுவர். இதுபோல் இன்னொரு பள்ளியின் இமாம் இதே விஷயத்தில் பிடிபட்டபோது, அவுலியாக்கள் செய்யாத செயலையா நான் செய்துவிட்டேன் என்று கேட்டாரே பார்க்கலாம். இதிலிருந்து இவர்கள் அவுலியாக்களாக மதிப்பவர்களிடமும் இத்தீயபழக்கம் இருக்கிறது. இவரும் மாணவராக இருக்கும்போது அப்படிப்பட்ட அவுலியாக்களால்(?) கெடுக்கப்பட்டிருப்பார் என்பது விளங்குகிறதா? இல்லையா? மவ்லவிகள் மீதுள்ள குருட்டு பக்தியால் சமுதாயத் தலைவர்கள், பள்ளி முத்தவல்லிகள் இவர்களின் இத்தவறுகளையும் மூடி மறைக்கவே முற்படுகின்ற

9:31 வசனப்படி இம்மதகுருமார்களை வழிபடுகிறவர்கள் நேர்வழி பெறவேமாட்டார்கள்.

னர். இதன் காரணமாக இந்த மவ்லவிகளின் தரங் கெட்ட நிலை வெளியுலகுக்குத் தெரியும் வாய்ப் பில்லாமல் போய்விடுகிறது. தனி நபர்களின் தவறுக ளைப் பகிரங்கப்படுத்த வேண்டும் என்பது நமது நோக்கமல்ல. சமுதாயத்தைச் சத்திய வழியில் கொண்டு செல்லுவது ஒவ்வொரு முஸ்லிமின் தலை யாய கடமையாகும். அதற்கு மாறாக சமுதாயத்தை அசத்தியத்தில் மூழ்கடித்து அற்ப உலக ஆதாயம் அடைய இந்த மவ்லவிகள் முற்படுவதால், இவர் களை அடையாளம் காட்டிச் சமுதாயத்தை சிந்தித்து செயல்பட வைப்பது நமது கடமையாகும்.

**படித்துத் தேற வேண்டிய அவசியம் இல்லை:**

இத்தனை முறைகேடுகள் உள்ள அரபி மதர ஸாக்களில் அவர்களே திட்டமிட்டு நடைமுறைப் படுத்தும் கல்வியாவது முறைப்படி கற்பிக்கப்படுகி றதா? என்றால் அதுவும் இல்லை. உஸ்தாதுகள் மீது குருட்டுப் பக்தியை மாணவர்களிடையே வளர்ப்ப தற்கு அவர்களின் மூளையைச் சலவை செய்ய, செய்யப்படும் முயற்சியில் பத்தில் ஒரு பங்கு தானும் பாடங்களைப் படிப்பிப்பதில் காட்டப்படுவ தில்லை. அரபி மதரஸாவில் சேரும் ஒரு மாணவன் பாடங்களை ஒழுங்காகப் படித்து பரீட்சைகளில் ஒழுங்காக எழுதி பாஸாக வேண்டும் என்ற கட்டா யம் இல்லை. அவன் படிக்கிறானோ படுத்துத் தூங்கு கிறானோ, 7 வருடங்கள் ஆகிவிட்டால் ஆலிம் பட்டத்துடன்(?) வெளியே வருவான். இந்த மவ்லவி களிடம் என்ன திறமையை எதிர்பார்க்க முடியும்?

மதரஸாக்களின் இந்த நிலையை அங்குள்ள உஸ் தாதுகளும், மாணவர்களும் நன்கு அறிந்தே வைத் துள்ளனர். மதரஸாக்களில் உஸ்தாதுகள் மாணவர் களைப் பார்த்து அடிக்கடி இவ்வாறு சொல்லு கிறார்கள்.

“ஒரு மாட்டைக் கொண்டு வந்து மதரஸாவி னுள் கட்டி 7 வருடங்கள் சாப்பாடு போட்டால். அதற்கும் மவ்லவி ஆலிம் பட்டம் கிடைத்து விடும்’. என்று கிண்டலாகவே கூறுவார்கள். 4 அல்லது 5 வருடங்களிலேயே மவ்லவி ஆலிம் பட்டம் பெறும் மாணவர்களும் உண்டு. அவர்களின் திறமை காரண மாக Double Promotion என்று எண்ணிவிடாதீர்கள். ஒரு மதரஸாவில் 2ம் ஜுமரா ஓதிவிட்டு அடுத்த வரு டம் வேறொரு மதரஸாவில் 3ம் ஜுமரா ஓதினேன்’ என்று பொய் கூறினால் போதும். 4ம் ஜுமராவில் சேர்த்துக் கொள்வார்கள். காரணம் ஒரு மதரஸாவி லிருந்து இன்னொரு மதரஸாவில் போய்ச் சேர உரிய சான்றிதழ்களோ, பரீட்சை முறையோ கிடையாது. இவற்றை ஏற்படுத்த முடியாது என்பதல்ல. அப்படி ஏற்படுத்தினால் மதரஸாவைக் கொண்டு பிழைப்பு நடத்தும் இவர்களின் பிழைப்பில் மண் விழுந்து விடும் என்பதை இவர்கள் நன்கு அறிந்து வைத்திருக் கிறார்கள். மக்களிடம் பணம் வசூல் செய்ய மாண வர்களின் தலைகளைக் காட்ட வேண்டும். மாணவர் களைச் சேர்ப்பதில் இந்த நியதிகளை எல்லாம் கடை பிடித்தால் மாணவர்கள் எங்கே கிடைக்கப் போகி றார்கள். எனவே எண்ணிக்கைக்கு ஆட்கள் கிடைத் தால் போதும் என்பதே மதரஸாக்களில் இன்றைய நிலையாக இருக்கிறது.

இதனை 1978ல் நாம் நன்கு உணர்ந்து கொண் டோம். மதரஸாக்களில் போதனா முறை ஒழுங்கி ல்லாமல் இருப்பதாலும், படிப்பில் கண்டிப்புக் காட் டுவதற்கு வகை இல்லாததாலும், மதரஸாக்களிலி ருந்து தகுதி இல்லாதவர்களே மவ்லவிகளாக வெளி வருகின்றனர். தகுதி உள்ளவர்களை மவ்லவிகளாக வெளிவரச் செய்ய ஒரு காரியம் செய்யலாம். எங்கே யார் மதரஸா நடத்தினாலும் சரி. 1ம் ஜுமராவிலி ருந்து 6ம் ஜுமரா வரை அந்தந்த மதரஸாக்களில் எப்படி பரீட்சை நடத்தினாலும் சரி, நடத்தாவிட் டாலும் சரி, மவ்லவி ஆலிம் பட்டம் கொடுக்க இறுதி 7ம் ஜுமராவின் பரீட்சையை பொதுவாக ஆக்குங் கள். தமிழ்நாடு ஜ.உ.சபையினரே கேள்விகளைத் தயாரித்து பரீட்சை நடத்தி வெற்றி பெறுகிறவர் களுக்கு மட்டும் மவ்லவி பட்டம் கொடுக்கலாம் என்ற ஆலோசனையைக் கூறினோம். இந்த ஆலோ சனையை சங்கரன் பந்தலில் நடைபெற்ற ஜ.உ.ச. கூட்டத்திலேயே வைத்தோம். சமூக நலனில் அக் கறை உடையவர்களாக இருந்தால் நிச்சயமாக இந்த நமது ஆலோசனை ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கும்.

ஆனால் அவர்களிடமிருந்து வந்த பதில் என்ன தெரியுமா? நீங்கள் கூறும் ஆலோசனைப்படி பரீட்சை வைத்தால் எங்கள் மதரஸாக்களை எல்லாம் இழுத்து மூட வேண்டி வரும் என்று பலர் வாய் கூசாமல் கூறினார்கள்.

இதிலிருந்து என்ன தெரிகிறது? தகுதியற்றவர் களை எண்ணிக்கைக்காக மக்களிடம் காட்டி பணம் வசூலித்து காலத்தை ஓட்டி வருகிறோம். நீங்கள் ஆலோசனை கூறுவது போல் பொதுப் பரீட்சை வைத்தால் பெரும்பான்மையினர் தேறமாட்டார் கள். தங்கள் மதரஸாக்களின் கையாலாகாத நிலை வெட்ட வெளிச்சமாகி விடும். பொதுமக்களிடமி ருந்து பணம் வசூலிப்பதில் சிக்கல் ஏற்பட்டு விடும் என்பதை அவர்கள் உணர்ந்து வைத்திருப்பது தானே நமது இந்த ஆலோசனையை அன்று ஏற்க ஜ.உ. சபை யினர் மறுத்து விட்டதற்குரிய காரணம்! புரிகிறதா?

இந்த மவ்லவிகளை சத்தியத்தை உணரச் செய்ய நம்மால் ஆன முயற்சிகள் அனைத்தையும் செய்து, அவற்றில் தோல்வியுற்ற பின்பே மவ்லவிகளைப் புறக்கணித்து சத்தியத்தைப் பொதுமக்கள் முன் எடுத்து வைக்க ஆரம்பித்தோம். இந்த மவ்லவி வர்க் கம் நமது இந்த சத்திய முயற்சிக்கு ஆதரவு தராவிட் டாலும், மௌனமாக ஒதுங்கி இருந்தாலும் நாம் அவர்களைக் கண்டு கொண்டிருக்க மாட்டோம். ஆனால் அவர்கள் நபி(ஸல்) அவர்களது காலத்தில் அன்றைய ஜ.உ. சபையினராகிய தாருந் நத்வாவினர் செயல்பட்டது போல், சத்தியத்தை எடுத்துச் சொல் லும் நம்மீது வீண் அபாண்டங்களையும் பழிகளை யும், அவதூறுகளையும் கூறி நம்மை எதிர்ப்பது கொண்டும், மக்களிடம் எங்களைக் குழப்பவாதி கள், அமானித மோசடியாளர்கள், தீவிரவாதிகள், வழிகேடர்கள் என்றும் ஓயாது பிரச்சாரம் செய்வது கொண்டும் சத்தியம் பொது மக்களை சென்றடைய முடியாமல் தடுப்பதற்கு முனைந்து விட்டனர். இந்த நிலையில் அவர்களின் உண்மையான இழிநிலை களை மக்களுக்கு அடையாளம் காட்டாமல் வேறு

இந்த தாஃகூத்களான மனித ஷைத்தான்களின் பிடியிலிருந்து விடுபட்டு அனைவரது உபதேசங்களையும்

என்ன செய்ய முடியும்? சத்தியம் நிலை நாட்டப்படுவது இந்த முல்லாக்களின் வரட்டுக் கௌரவத்தை விட முக்கியமானதாகும்.

**முல்லாக்களை நம்பினால் மறுமலர்ச்சி உண்டா?**

இந்த மவ்லவி வர்க்கத்தை மக்கள் நம்பி இருக்கும் காலமெல்லாம் மக்களிடையே மறுமலர்ச்சி ஏற்படப் போவதில்லை. மக்கள் சத்தியத்தை உணர்ந்து கலப்படமில்லாத தூய இஸ்லாம் மார்க்கத்தை விளங்கி ஏற்றுக் கொள்ளப்போவதில்லை. காரணம் மக்கள் குர்ஆன், ஹதீஸை கேட்பதையோ, பார்ப்பதையோ இந்த முல்லாக்கள் சகிக்காமல் தடுத்து வருகின்றனர். எனவே இந்த மவ்லவிகளையும் அவர்களது பின்னணிகளையும் பச்சையாக எதையும் மறைக்காமல் மக்கள் முன் எடுத்து வைப்பது எங்களுக்குக் கடமையாகி விட்டது. அதனையே செய்து வருகிறோம்.

இந்த மவ்லவி வர்க்கத்தினர் அறியாத நிலையில் இந்தத் தவறுகளைச் செய்து வருகிறார்கள் என்று சொல்ல முடியாது. நன்கு அறிந்த நிலையிலேயே சத்தியத்தை எதிர்த்து வருகின்றனர். தங்கள் மதரஸாக்களில் குர்ஆன், ஹதீஸை நேரடியாகப் போதிக்க ஆரம்பித்து விட்டால், இதுவரைத் தங்களுக்கென்று ஒரு தனி அந்தஸ்தை-ஹஜ்ரத்-ஹழரத்-சந்நிதானம்-ஏற்படுத்தி வைத்திருக்கின்றனர் அல்லவா? அது என்னாவது? அதாவது பிராமணர்கள் தாங்கள்தான் பிரம்மாவின் முகத்திலிருந்து படைக்கப்பட்டவர்கள். தங்களுக்கு தெய்வாம்சம் உண்டு. எனவே மக்கள் தங்களை ஸ்வாமி என்று அழைத்துக் கொண்டு தெய்வத்தன்மை பொருந்தியவர்களாகக் கருதி மரியாதை செய்து வர வேண்டும் என்ற தவறான-மோசமான நிலையை உண்டாக்கி வைத்திருக்கிறார்கள் அல்லவா? அதேபோல் இந்த மவ்லவி வர்க்கமும் தாங்கள் அரபி கற்றிருப்பதால் உயர்ந்தவர்கள் மவ்லவி-அல்லாஹ்வைச் சேர்ந்தவர்கள்-தெய்வத் தன்மையுடையவர்கள், மக்கள் தங்களை ஹஜ்ரத்-சந்நிதானம் என அழைத்துக் கொண்டு தங்களின் வாக்கை வேதவாக்காக ஏற்றுச் செயல்பட வேண்டும் என்ற தவறான-ஷிர்க்கான நிலையை ஏற்படுத்தி வைத்துள்ளனர். தெரிந்தே இவ்வாறு செயல்பட்டு வருகின்றனர். பிராமண முஸ்லிம்களாகப் பவனி வருகின்றனர்.

மதரஸா மாணவர்கள் குர்ஆன், ஹதீஸை நேரடியாகக் கற்றுத் தெளிவு பெற்றால், தாங்கள் நீண்ட நெடுங்காலமாக கட்டிக்காத்து வரும் தங்களின் தனி அந்தஸ்து தவிடு பொடியாகி விடும் என்ற அச்சமே அவர்களை குர்ஆன், ஹதீஸை போதிப்பதை விட்டும் தடுக்கிறது. மற்றபடி அவர்கள் மனம் வைத்தால் சத்தியத்தைப் போதிக்க முடியும். ஆற்றல் குறைந்தவர்களையே தேர்ந்தெடுத்து அவர்களுக்கு குர்ஆனை முறைப்படி தஜ்வீது சட்டத்துடனும், இனிமையாகவும் ஓதக் கற்றுக் கொடுக்கத்தானே செய்கிறார்கள். குர்ஆனை மனப்பாடமிட்டு ஹாபிழ்களாக உருவாக்கத்தானே செய்கிறார்கள். இந்த இரு காரியங்களைத்தான் இன்றைய அரபி மதரஸாக்கள் உருப்படியாகச் செய்து வருகின்றன. தங்களின் புரோகிதத் தொழிலுக்கு இவை இரண்டும் மிகமிக அவசியம் என்பதாலேயே இவற்றில் கவனம் செலுத்துகிறார்கள்; இங்கும் அவர்களின் சுயநலமே வெளிப்படுகிறது.

அதாவது அற்ப உலக ஆதாயம் கருதியே இவை இரண்டையும் கற்றுத் தருகின்றனர். இமாமத் செய்யவும், ரமழானில் தராவீஹ் என்ற பெயரால் 8+3க்குப் பதிலாக 20+3 தொழ வைத்து பல ஆயிரக் கணக்கில் ஊதியம்-பெறவுமாகும். மஸ்ஜிதுகளில் இமாமாகப் பணியாற்ற வேண்டும். மவ்லவிகள் நல்ல கிராஅத்தைக் கொண்டு மக்களைக் கவர வேண்டும் என்பதில் அக்கறையாகச் செயல்படத் தானே செய்கின்றனர். அப்படியானால் அந்த மவ்லவிகள் சத்தியத்தை உணர்ந்து செயல்படும் வகையில் குர்ஆன், ஹதீஸை ஏன் போதிக்க முடியவில்லை? சிந்திக்க வேண்டுகிறோம்.

தங்களின் தனி அந்தஸ்து தக்க வைக்கப்பட வேண்டும். உஸ்தாது என்ற போர்வையில் ஹஜ்ரத்-சந்நிதானம் என்ற இறைத் தன்மையை நிலைக்கச் செய்ய வேண்டும் என்பதைத் தவிர வேறு காரணம் இருக்க முடியுமா? மவ்லவி என்று அரபியில் கூறினால் அல்லாஹ்வைச் சேர்ந்தவன் என்று பொருள் படுகிறது. இவர்கள் மட்டும்தான் அல்லாஹ்வைச் சேர்ந்தவர்களா? மற்ற மக்கள் எல்லாம் அல்லாஹ்வைச் சேர்ந்தவர்கள் இல்லையா? மவ்லவி, ஹஜ்ரத் போன்ற பதங்களை அவர்கள் விரும்புவதிலிருந்தே அவர்கள் தங்களை இறைத் தன்மை-தெய்வாம்சம் பொருந்தியவர்களாகக் கருதுகிறார்கள் என்பது புரிகிறதல்லவா?

மவ்லவி வர்க்கத்தின் மீதுள்ள குருட்டுப் பக்தியை விட்டு நிதானமாகச் சிந்தித்தால் இந்த மவ்லவி வர்க்கம் இந்தச் சமுதாயத்திற்கு எத்தனைப் பெரிய கொடுமையை இழைத்து வருகிறது என்பது புரியவரும். நபி(ஸல்) அவர்கள் காலத்திலிருந்தே இந்த முல்லா வர்க்கம் மார்க்கத்தில் ஆதிக்கம் செலுத்தி வருகிறது என்ற எண்ணம் மிகப்பெரிய தவறாகும். நபி(ஸல்) அவர்கள் குறைஷிகளிடையே வேரூன்றிப் போயிருந்த முல்லாப் பரம்பரையினரை வேரோடு வேரடி மண்ணோடு ஒழித்துக் காட்டினார்கள். தாருந் நத்வா இருந்த சுவடே தெரியாமல் அழிக்கப்பட்டது. இஸ்லாத்தில் புரோகிதர்களுக்கு இடமே இல்லை என்று தெள்ளத் தெளிவாக அறிவிக்கப்பட்டது. தனக்குப் பின்னால் புரோகிதக் கூட்டமான இந்த முல்லா வர்க்கம் மீண்டும் சமுதாயத்தில் நுழைந்து விடாதிருக்க "அஜமியை(அரபி மொழி தெரியாதவன்) விட அரபி (அரபி மொழி தெரிந்தவன்) உயர்ந்தவன் அல்ல. அதே போல் அரபியை விட அஜமி உயர்ந்தவன் அல்ல" என தெள்ளத் தெளிவாக தனது ஹஜ்ஜின் இறுதி உரையில் அறிவித்து விட்டார்கள். அரபி மொழியைக் கொண்டு இந்த முல்லா வர்க்கம் பெருமை பேசிச் சமுதாயத்தைக் கூறு போடுவார்கள் என்று தெரிந்தே நபி(ஸல்) அவர்கள் இவ்வாறு எச்சரித்தார்கள் போலும். காரணம் ஆரம்ப காலத்திலிருந்தே இந்தப் புரோகிதர்கள் கூட்டமே (முல்லா வர்க்கமே) மனித சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வைப் போதித்து பல பிரிவினர்களாகவும், அது முற்றிப் பல ஜாதிகளாகவும் பிரித்து

கேட்டு அவற்றில் குர்ஆன், ஹதீஸ்படி உள்ளதை எடுத்து நடப்பவர்களே நேர்வழி நடப்பவர்கள்.

ஒருவருக்கொருவர் சண்டையிட்டு அழிந்துபட காரணமாக இருந்து வருகிறது. இந்தச் சாபக்கேடு தமது உம்மத்தைத் தொடராதிருக்க நபி(ஸல்) அவர்கள் பல முன்னெச்சரிக்கைகளைச் செய்திருந் தாலும், இந்த சமுதாயத்தை ஏமாற்றி மீண்டும் இந்த புரோகிதர்களான முல்லா வர்க்கத்தினர் இந்த சமு தாயத்தில் வந்து நுழைந்து ஆதிக்கம் செலுத்து கின்றனர்.

**நபி(ஸல்) அவர்கள் சிறப்பித்துச் சொன்ன காலம் பார்ர்:**

நபி(ஸல்) அவர்களோடு இருந்த நபி தோழர்க ளில் அரபி எழுதப் படிக்கத் தெரியாதவர்கள், அரபி நாட்டைச் சாராத பார்ஸி, ஹபஷி தேசத்தைச் சார்ந்தவர்கள் இருந்திருக்கிறார்கள். நபி தோழர் களில் குர்ஆன் ஹதீஸை அதிகமாக அறிந்தவர்களும், அறியாதவர்களும் இருந்து தான் இருக்கிறார்கள். ஆனால் குர்ஆன், ஹதீஸை அறிந்தவர்கள் தங்களை ஆலிம்-அறிந்தவர் என்றும் மற்றவர்களை அவாம் - பாமரர் என்றும் பிரித்துச் செயல்பட்டதாகச் சரித்தி ரமே இல்லை. மார்க்க விஷயங்களில் பல விஷயங் களை நன்கு தெரிந்தவர், தனக்குத் தெரியாத ஒரு விஷயத்தை அந்த ஒரு விஷயத்தை மட்டும் தெரிந்த வரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளும் அழகிய நடை முறையைக் கொண்டிருந்தனர். தங்களுக்குள் ஏற்றத் தாழ்வைக் கற்பிக்கவில்லை. அல்லது தனக்குக் குர் ஆன், ஹதீஸைக் கற்றுக் கொடுத்த உஸ்தாதுக்கு தெய்வாம்சம் கற்பித்து அவர்களை மனித நிலையி லிருந்து தவறே செய்யாத தெய்வ நிலைக்கு உயர்த்த வில்லை.

நபி(ஸல்) அவர்கள் காலத்தில் மட்டுமல்ல, அதற் குப் பின்னும் இந்த அழகிய நிலை நீடித்தே வந்திருக் கிறது. இதற்கு அந்த நான்கு இமாம்களுமே தக்க சான்றாகும். இமாம் மாலிக்(ரஹ்) அவர்கள் இமாம் ஷாபிஈ(ரஹ்) அவர்களின் உஸ்தாது. இமாம் ஷாபிஈ அவர்கள் இமாம் ஹன்பல்(ரஹ்) அவர்களின் உஸ்தாது. இமாம் அபூஹனீபா(ரஹ்) அவர்களின் உஸ்தாதாக ஹம்மாது(ரஹ்) அவர்கள் இருந்திருக் கிறார்கள். இவர்களில் யாரும் தங்களின் உஸ்தாது களின் சொல் நூறு கிதாபுகளைப் பார்க்கிலும் ஆதாரப்பூர்வமானது என குருட்டுத்தனமாகச் செயல்பட்டதாகத் தெரியவில்லை. குர்ஆன், ஹதீ ஸைப் பார்த்தே செயல்பட்டது தெளிவாகத் தெரிகி றது. அதனைத் தெளிவாக அவர்கள் அறிவித்துள்ள தும் சரித்திர ஏடுகளில் பதிவு செய்து பாதுகாக்கப் பட்டுள்ளது. அவற்றை நாம் 1986 நவம்பர் அந் நஜாத் இதழில் வெளியிட்டிருந்தோம். இப்போது “முஸ்லிம் சமுதாய சிந்தனைக்கு” என்று தனி நூலாக வந்துள்ளதிலும் இடம் பெற்றுள்ளது.

அன்றைய கால கட்டத்தை ஆராய்ந்து பார்க் கும்போது, நபி(ஸல்) அவர்கள் போதித்தபடியே குர் ஆன், ஹதீஸையே ஒருவருக்கொருவர் போதித்து வந்துள்ளனர். ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை அறிந்து கொள்வதில் அந்த இமாம்கள் பெரிதும் முயற்சிகள் எடுத்துள்ளனர். ஆதாரப்பூர்வமான ஹதீஸ்கள் கிடைத்தால் அதனை அவசியம் எனக்கு அறிவிக்கவும் என உஸ்தாகிய இமாம் ஷாபிஈ(ரஹ்) அவர்கள் தனது மாணவராகிய ஹன்பல்(ரஹ்) அவர்களிடம் கூறி இருக்கிறார்கள் என்றால் இதிலி ருந்து என்ன தெரிகிறது? உஸ்தாதின் வாக்கை வேத வாக்காகக் குருட்டுத்தனமாக நம்பிச் செயல்படு பவராக இமாம் ஹன்பல்(ரஹ்) அவர்களும் இருந்ததில்லை. ஆதாரப்பூர்வமான ஹதீஸ் தனது மாணவரிடமிருந்து கிடைத்தால் அதனை உதா சீனம் செய்யும் நிலையில் இமாம் ஷாபிஈ(ரஹ்) அவர்களும் இருந்ததில்லை. ஆசிரியராக இருந்தா லும், மாணவராக இருந்தாலும் ஆதாரப்பூர்வமான ஹதீஸ்களை அறிவதிலும், அவற்றின்படி செயல்படு வதிலுமே குறியாக இருந்திருக்கிறார்கள். அதல்லா மல் ஆசிரியரின் வாக்கை வேதவாக்காக எடுத்துச் செயல்படுபவர்களாகவோ, ஒருவரை ஒருவர் தக் லீது செய்பவர்களாகவோ இருக்கவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறதல்லவா?

**ஒரு முக்கியமான விளக்கம்:**

இங்கு குர்ஆன், ஹதீஸை வைத்துச் சுய மாகச் சிந்தித்து விளங்கிச் செயல்படுவதற்கும், உஸ்தா தையோ, முன்னோர்களையோ நம்பி தக்லீது செய் வதற்கும் உள்ள பெரிய வேறுபாட்டை விளக்குவது நமது கடமையாகும். அல்லாஹ் தனது நெறிநூல் கட்டளையில்,

“உங்கள் ரப்பிடமிருந்து இறக்கப்பட்டதையே பின்பற்றுங்கள், மற்றவர்களை உங்கள் பாதுகாவலர் களாக்கிப் பின்பற்றாதீர்கள்’ (7:3) என்று தெளிவா கக் கட்டளையிட்டுள்ளான்.

ஒருவர் குர்ஆன், ஹதீஸை வைத்து சத்தியத்தை விளங்கிக் கொள்ளும் தூய்மையான எண்ணத்து டன் முயற்சி செய்து அதில் அவர் சரியான முடிவுக்கு வந்தால் அவருக்கு இரண்டு நன்மை. ஒன்று முயற்சி செய்ததற்கு, மற்றொன்று சரியான முடிவுக்கு வந்த தற்கு, ஆயினும் அவர் தவறான முடிவுக்கு வந்தால் முயற்சி செய்ததற்கு ஒரு நன்மை உண்டு.

(அம்ர்பின் ஆஸ்(ரழி) அபூஸலமா(ரழி) புகாரீ, முஸ்லிம், அபூதாவூத், திர்மிதீ, நஸயீ)

இப்போது இந்த குர்ஆன் வசனத்தையும், ஹதீஸையும் வைத்துச் சிந்தித்துப் பாருங்கள்.

குர்ஆனையும், ஹதீஸையும் வைத்துக் கொண்டு ஒருவர் சத்தியத்தை விளங்க முற்படுகிறார். அவர் எண்ணத்தில் தூய்மை இருக்கிறது. ஆயினும் அவரது இயலாத தன்மையின் காரணமாக சரியான முடி வுக்கு வர முடியவில்லை. நாளை மறுமையில் அல் லாஹ்வின் தர்பாரில் ஆஜராகும் போது ‘யா அல் லாஹ் நான் உனது வழிகாட்டல் நூலையும், உனது தூதரின் நடைமுறைகளையும் வைத்து தூய எண் ணத்தோடு 7:3 வசனத்தின்படி உனது கட்டளைக்கு வழிபட்டு ஆராய்ந்து செயல்பட்டேன். எனது இயலாமையால் அதில் தவறான முடிவுக்கு வந்து விட்டேன்’ என்று முறையிடுகிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். நிச்சயம் அல்லாஹ் அவரை மன்னிப் பான் என்று நம்ப இடமிருக்கிறது. அதே சமயம் அவர் குர்ஆன், ஹதீஸை தன்னால் விளங்க முடி யாது என்ற தாழ்வு மனப்பான்மையால் அவற்றில் முயற்சி செய்யாமல், ஒரு இமாமையோ, அல்லது

அனைவரது அறிவுரைகளைக் கேட்பவர்களுக்கே அல்லாஹ்வின் நன்மாராயமும் பாராட்டும் கிடைக்கிறது!

உஸ்தாதையோ அவர்கள் தன்னை நரகத்திலிருந்து பாதுகாப்பார்கள் என நம்பி அவர்களை தனது பாதுகாவலர்களாக்கி அவர்களைத் தக்லீது செய்தார் என்று வைத்துக் கொள்வோம். நாளை அல்லாஹ் வின் தர்பாரில் என்ன சொல்வார்? குர்ஆன், ஹதீஸை என்னால் விளங்க முடியாது என எண்ணி இந்த இமாமை நான் தக்லீது செய்தேன்' என்றுதான் சொல்ல முடியும். அவர் 33:66,67,68 இறைவாக்குகள் படி நரகம் புகுவது உறுதிதானே:

இப்போது சிந்தியுங்கள்! குர்ஆன், ஹதீஸ் எளிதானவை, தெளிவானவை, இரவும், பகலைப் போன்று வெள்ளை வெளேர் என்று தெளிவாக்கப் பட்டவை என்றுதான் குர்ஆனிலும், ஹதீஸிலும் காணப்படுகிறது. குர்ஆன், ஹதீஸை விளங்க முடி யாது; அல்லது விளங்குவதற்குக் குறிப்பிட்ட சில தகுதிகள் இருக்க வேண்டும் என்று குறிப்பிடும் ஒரே ஒரு வசனமும் இல்லை. அதுமட்டுமல்ல, யாரையும் தங்கள் பாதுகாவலர்களாக ஆக்கி பின்பற்றுவதற் கும் ஒரு ஆதாரமும் இல்லை. மாறாக அவ்வாறு மற்றவர்களைப் பாதுகாவலர்களாக்கிப் பின்பற்றக் கூடாது என 7:3 வசனத்தில் கட்டளையிட்டிருக் கிறான் அல்லாஹ்.

இந்த நிலையில் நாம் ஒருவரை நம்பி அவரைப் பின்பற்றி நடப்பது அதாவது தக்லீது செய்வது அல்லாஹ்வின் கட்டளைக்கு மாறு செய்ததாகத் தானே முடியும். 'நான் என் இறுதித் தூதர் முஹம் மது (ஸல்) அவர்களைப் பின்பற்றும்படி தான் தெளிவாக கட்டளையிட்டுள்ளேன். மற்றபடி இமாம்களான அவூஹனீபாவையோ, மாலிக் கையோ, ஷாபிஈ யையோ, ஹன்பலையோ(ரஹ்-ம்) அல்லது வேறு மவ்லவிகளையோ கண்மூடி பின்பற்றும்படி-அதாவது தக்லீது செய்யும்படி எங்கே கட்டளையிட்டுள்ளேன்' என்று அல்லாஹ் மறுமையில் கேட்டால் அதற்கு என்ன பதில் சொல்ல முடியும்? அல்லாஹ் வின் தெளிவான கட்டளைக்கு மாறு செய்த குற்றத்திற்கு ஆளாக வேண்டி வருமா, வராதா? என்பதை நிதானமாகச் சிந்தித்துச் செயல்பட முன் வாருங்கள். (பார்க்க அல்குர்ஆன் 33:36, 66,67,68)

**மனமுரண்டாகச் செய்யும் தவறுக்கு மன்னிப் புண்டா?**

அல்லாஹ்வின் கட்டளையை ஏற்றுச் செயல் பட்டால் அதில் குறை ஏற்பட்டாலும் அல்லாஹ் மன்னிக்க வாய்ப்பு இருக்கிறது. அதே சமயம் அல்லாஹ்வின் கட்டளைக்கு, அதுவும் அதனை அறிந்த நிலையில் மாறு செய்கிறவனை அல்லாஹ் எப்படி மன்னிப்பான்? அறிந்த நிலையில் அல்லாஹ் வின் கட்டளைக்கு மாறு செய்த ஷைத்தானின் கதி தான் ஏற்படும். அல்லாஹ் காப்பானாக! எந்த நிலை யிலும் தக்லீது செய்யும் முகல்லிதாக இருக்க குர்ஆன், ஹதீஸில் அணுவளவும் ஆதாரம் இல்லாத நிலை யில்தான், இந்த அரபி மதரஸாக்கள் தக்லீதை மிகக் கடுமையாக வலியுறுத்திப் போதித்து வருகின்றன.

உண்மையில் இந்த அரபி மதரஸாக்களுக்கு மக்களுக்கு மத்தியில் செல்வாக்கு ஏற்பட்டதே மிகச் சமீப காலத்தில்தான். ஆங்காங்கே தெருத் திண்ணை களில் உட்கார்ந்து கொண்டு தங்களின் குருட்டுத் தனமான குப்பைக் கொள்கைகளை போதித்துக் கொண்டிருந்த இந்த முகல்லிது முல்லாக்களுக்கு மக்களிடையே இப்போதுதான் செல்வாக்கு ஏற் பட்டு வளர்ந்திருக்கிறார்கள். பல அரபி மதரஸாக் களை உருவாக்கிக் கொள்ளும் வாய்ப்பும் ஏற்பட் டுள்ளது. சூஃபிஸ இஸ்லாத்தை இவர்கள் சுமார் 1000 வருடங்களுக்கு முன்னால் தோற்றுவித்துப் போதித்து வந்தாலும் 900 வருடங்களுக்கு மேலாகத் தங்களின் தவறான கொள்கையை தெருத் திண் ணைகளிலும் மறைவிடங்களிலும் வைத்தே போதிக் கும் நிலை இருந்து வந்தது. கடந்த 100 வருடங்க ளுக்குள்தான் இப்படி அரபி மதரஸாக்களாக வளரும் வாய்ப்பு ஏற்பட்டது. நடிகர்களுக்கு நீண்ட நெடு நாட்களாக கூத்தாடிகள், திண்ணைத் தூங்கி கள் என்ற பெயரே நிலைத்திருந்தது. கடந்த 75 வருட கால கட்டத்தில் கூத்தாடிகள், மக்களி டையே செல்வாக்குப் பெற்றுத் தலைவர்களாகி மக்களை ஆட்சி செய்யும் வாய்ப்பையும் பெற்றுக் கொண்டது போல்தான், இந்த முகல்லிது முல்லாக்களும் வளர்ந்துள்ளார்கள்.

கடந்த 100 வருட காலத்தில் ஏற்பட்ட வளர்ச்சியை வைத்துக் கொண்டுதான் இந்த முல்லாக்கள் 'நாங்கள் தான் நபியவர்களின் வாரிசு கள், மக்களின் தலைவர்கள், எங்கள் சொல்படி தான் மார்க்க விஷயத்தில் மக்கள் நடக்க வேண்டும்' என தம்பட்டம் அடிக்கின்றனர். இவை நபி(ஸல்) அவர் களின் காலத்தில் இருந்த தாருந்நத்வாவினரின் கூற்றுகளை நினைவுபடுத்துகிறதா? இல்லையா? என்பதை இஸ்லாமிய சரித்திரம் நன்கு அறிந்தவர் கள் புரிந்து கொள்ள முடியும். இவர்களின் ஜ.உ. சபை அமைக்கப்பட்டு 80 ஆண்டுகள் கூட ஆக வில்லை என்பதே உண்மையாகும். (ததஜ ஜ.உ.ச. அமைக்கப்பட்டு வெறும் 25 ஆண்டுகளே!) இந்த நிலையில் தூய இஸ்லாத்தில் தனி உரிமை கொண் டாட அவர்களுக்கு என்ன அருகதை இருக்கிறது?

**மடமைக்கும் எல்லை உண்டோ?**

இந்த முகல்லிது முல்லாக்களிடம் இன்னொரு பொருளற்ற வினோத நிலையையும் பார்க்க முடி கிறது. அதாவது, இவர்களின் இந்த அரபி மதர ஸாக்களில் சில ஆண்டுகள் ஓசிச் சோறு சாப்பிட்டுக் கொண்டு தங்கியவர்கள் மட்டுமே ஆலிம்களாக இருக்க முடியும். அதல்லாமல், கல்லூரிகளில் படிப் புக்காகவும், சாப்பாடு மற்றும் தங்கும் வசதிகளுக் காகவும் ஃபீஸ் கட்டிப் படித்து அரபி மொழியில் பட்டம் பெற்று பாண்டித்யம் பெறுகிறார்களே, அப்படிப்பட்டவர்களை இந்த முகல்லிது முல்லாக் கள் ஆலிம்களாக ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். அரபு நாட்டிற்கே போய் அங்கு 10 ஆண்டுகளுக்கு மேலாகத் தங்கிக் கற்று அரபி மொழியில் தெளிவாக எழுதப் பேசக் கற்று குர்ஆன், ஹதீஸைத் தெளி வாகப் புரிகிறவர்கள் இவர்களிடத்தில் ஆலிம்களாக கருதப்பட மாட்டார்கள். அதைவிட வேடிக்கை இவர்களின் இந்த மதரஸாக்களில் சில வருடங்கள் தங்கி ஓசிச் சோறு சாப்பிட்ட நிலையில் மவ்லவி

அவர்களையே அறிவாளர்களாக அல்லாஹ் புகழ்கிறான் என்று 39:17,18 இறைவாக்குகள் கூறுகின்றன.

ஸனது கொடுக்கப்பட்டு ஆலிம்களாக இவர்களால் கருதப் பட்டவர்கள்-ஒப்புக் கொள்ளப்பட்டவர் கள் அதன்பின் அரபு அரபு நாடு சென்று அதற்கு மேல் 5 ஆண்டுகளோ 10 ஆண்டுகளோ செலவிட்டு அரபி மொழியில் திறமையாக எழுத பேசவும், குர்ஆன், ஹதீஸை அதிகமாக அறிந்து கொள்ளும் வாய்ப்பையும் பெற்றுக் கொண்டால் அவர்கள் இந்த முல்லாக்களிடத்தில் ஆலிம்களின் நிலையை இழந்து ஜாஹில்களாக ஆகி விடுகிறார்கள். இதனை உங்களால் புரிந்து கொள்ள முடிகிறதா? சிந்தித்துப் பாருங்கள்.

அறிவற்றவர்களைத் தேர்ந்தெடுப்பதற்கென்றே விதிகள் அமைத்து அப்படித் தேர்ந் தெடுத்த பின்பும் அவர்களிடம் மிச்சம் மீதியுள்ள சுய சிந்தனையை யும் போக்கி அவர்களுக்கு மூளைச் சலவை செய்து அல்லாஹ்வுக்கு இணை வைக்கும் அத்துவைதத்தை -இறைவனும் அடியானும் இரண்டறக் கலக்கும் நிலையை ஒப்புக் கொள்ளச் செய்து, உஸ்தாதுகளை தெய்வாம்சம் பொருந் தியவர்களாக நம்பச் செய்து, மண்டியிடச் செய்து இவற்றிற்குச் சாதகமாக இவர்களால் திட்டமிட்டு தயாரிக்கப்பட்டுள்ள பிக்ஹு நூல்களை அவர்களின் மண்டைகளில் ஏற்றி மவ்லவிகளாக-ஆலிம்களாக(?) வெளியே அனுப்புகிறார்கள். அந்த மவ்லவிகளுக்கு அரபி யைத் தெளிவாகப் பேசவோ, எழுதவோ தெரி யாது. குர்ஆன், ஹதீஸை நேரடியாக விளங்கும் ஆற்றலும் இல்லை.

ஏழு வருடங்கள் ஓதி முடித்த அரபி மொழிதான் இப்படித் தாளம் போட்டுத் தடுமாற வைக்கிறது என்று இல்லை. அவர்களின் தாய் மொழி தமிழ் அதைவிட மோசம் "அலுகுகின்றார்கள்", "இரிக் கின்றார்கள்", "தமில்மொலி" என்று தமிழையே கொலை செய்யும் நிலையே காணப்படுகிறது, மதரஸா செல்லு முன்பு 3ம் வகுப்போ, தவறினால் 4ம் வகுப்போ மட்டுமே படித்திருப்பார்கள். பிரபல தவ்ஹீத் மவ்லவியே நான் 4ம் வகுப்பு மட்டுமே படித்துள்ளேன் என்று எமக்கு நோட்டீஸ் அனுப் பியது பலருக்குத் தெரிந்த இரகசியம். மதரஸாக்க ளில் அவர்களின் தாய்மொழி தமிழை முறையாகக் கற்றுக்கொள்ள எவ்விதப் பாடத்திட்டமும் இல்லை. உஸ்தாதுமார்களின் தமிழே தாளம் போடும்போது, மாணவர்களுக்கு தமிழை எப்படிக் கற்றுக் கொடுப்பார்கள். அந்த மவ்லவிகளில் ஒரு சிலர் விதிவிலக் காக சொந்த முயற்சியில் அரபி மொழியையும், தமிழ் மொழியையும் திறம்படக் கற்றுத் தேறினாலும், அவர்களை விட்டும் புரோகி தப் புத்தி ஒழிவதாக இல்லை. மற்ற மவ்லவிகளை விட இவர்களிடம் ஆணவமும், தலைக்கண மும் அதிகமாகவே காணப்படுகிறது. அபூ ஜஹ்லிடம் காணப்பட்டது போல்.

அவர்கள் மதரஸாவில் காலம் கழிக்கும் போது திட்டமிட்டு போதிக்கப்பட்ட ஆசிரியரை தெய் வாம்சம் பொருந்தியவராகக் கருதும் அறிவும், அறைகுறையாக அறிந்து கொண்ட பிக்ஹு சட்டங்களும் மட்டுமே தெரியும். அதனடிப்படை யில் எனது கண்ணியத்திற்குரிய உஸ்தாது சொன் னது எனக்கு நூறு கிதாபுகளைப் பார்ப்பதை விட ஆதாரபூர்வமானது என்று உஸ்தாதுகளை குருட் டுத் தனமாக நம்பிக் கொண்டிருப்பார்கள். இந்த நிலை யில் இவர்களை ஆலிம்களாக இந்த மதரஸாக்கள் ஒப்புக் கொள்ளும். ஆனால் அதன் பின் அவர்கள் அரபு நாட்டிற்குச் சென்று அங்கு முறையாக அரபி மொழியையும், குர்ஆனையும், ஹதீஸையும் கற்றுக் கொள்வதால் அவர்கள் இதுகாலம் வரை தாங்கள் இருந்து வந்த மடமை நிலை விளங்கி, குப்பைக் கிதாபுகளில் இருந்த மோகம் நீங்கி, சத்திய வழி யாகிய குர்ஆனையும், ஹதீஸையும் நேரடியாக ஓரளவாவது விளங்கிச் செயல்பட ஆரம்பித்து விடுகின்றனர். இந்த நிலை யில் இவர்களை ஆலிம் கள் என ஒப்புக் கொண் டால் இந்த முகல்லிது முல்லாக்களின் நிலை என்னா வது? அதனால்தான் இவர்களிடம் மவ்லவி ஆலிம் பட்டம் பெற்றபின் அரபு நாடு சென்று மேல் கல்வி கற்றுக் கொண்டால் அவர்கள் ஜாஹில்களாக மாறிவிடுகிறார்கள் என புதிய பாடம் சொல்லித் தருகின்றனர். இதைவிட பேதமையை வேறு யாரிடமும் பார்க்க முடியுமா? சிந்தித்துப் பாருங்கள்.

**இன்னொரு சீர்கேடு:**

இந்த சமுதாயத்தில் இந்த அரபி மதரஸாக்க ளைக் கொண்டு இன்னொரு சீர்கேடும் ஏற்பட்டு வருகிறது என்பதை நாம் இங்கு குறிப்பிடாமல் இருக்க முடியாது. தகுதியற்றவர்களைத் தேர்ந் தெடுத்து பயனற்ற பாடம் நடத்தி வருகின்றனர். இந்த நிலையில் மதரஸாவுக்கு ஓதச் சென்றர்களில் சிலர் நாம் முன்பு குறிப்பிட்டுள்ள சில காரணங் களால் வெளியே வந்து விடுகிறார்கள். அவர்க ளுக்கு இவ்வுலகில் வாழ வேறு வழி வகை தெரியாத நிலையில் இருக்கிறார்கள். எனவே கூசாமல் மக்களி டம் அதுவும் பெரும்பாலும் மஸ்ஜிதுகளிலே யாசகம் கேட்டு பிழைக்க ஆரம்பித்து விடுகிறார் கள். இந்த மதரஸாவில் ஓதிக் கொண்டிருந்தேன். தொடர்ந்து ஓத முடியவில்லை. இன்னின வகையில் சிரமங்கள் இருக்கின்றன. எனவே தயவு செய்து பொது மக்களே எனக்கு உதவுங்கள் என்று மஸ்ஜிதுகளில் பிச்சை எடுப்பதையும் பார்க்கத்தான் செய்கிறோம். மாற்று மதங்களில் தெய்வப்பணி செய்கிறவர்கள் பிச்சை எடுத்துத்தான் சாப்பிட வேண்டும் என்றதொரு நியதி உண்டு. அதனை இவர்களும் கடை பிடித்து வருகிறார்கள்.

நபிமார்களால் போதிக்கப்பட்ட தூய இஸ் லாத்தை மதமாக்கிப் புரோகிதர்கள் கடைபிடிக்கும் நடைமுறைகள், பெரும்பாலும் எல்லா மதங்களி லும் சின்னஞ்சிறு வித்தியாசங்களுடன் ஒத்திருப் பதை அவதானிக்க முடியும். இந்த முல்லாக்கள் யூத கிறிஸ்தவர்களை அப்படியே பின்பற்றுகின்றனர். அவர்கள் மேடைகளில் ஹதீஸ்கள் என்று முழங்கும் பெரும்பாலான கட்டுக்கதைகளும், கப்ஸாக்களும் பர்னபாஸ் பைபிளில் இருப்பதைக் காணலாம். திருடன் மற்றவர்களைத் திருடன், திருடன் என கூச்சலிட்டுக் கொண்டு தப்பிச் செல்வது போல், இந்த முல்லாக்கள் குர்ஆன், ஹதீஸை மட்டும் எடுத்

துச் சொல்லும் நம்மை யூத, கிறிஸ்தவர்களின் நடைமுறைகளை போதிக்கிறோம் என்றும், குழப்பவாதிகள் என்றும், தீவிரவாதிகள் என்றும் மேடைகள் தோறும் பிரச்சாரம் செய்வது திருடனின் பாணியிலேயாகும்.

உண்மையில் முகல்லிது முல்லாக்களே குழப்பவாதிகளாகவும், யூத கிறிஸ்தவ நடைமுறைகளை இஸ்லாத்தின் பெயரால் செயல்படுத்துகிறவர் களாகவும் இருக்கிறார்கள் என்பதை நடுநிலை மக்கள் நிதானமாகச் சிந்தித்தால் விளங்க முடியும். ஹிந்துக்களிடம் காணப்படும் குருகுலக் கல்வியும், வேதக்காரர்களிடம் காணப்படும் குருத்துவக் கல்வியும், இந்த முல்லாக்கள் இந்த மதரஸாக்களில் நடைமுறைப்படுத்தும் மவ்லவி கல்வியும் ஆக இவை மூன்றும் ஒரே அடிப்படையிலானவையே. மக்கள் சத்தியத்தை உணர முடியாமல் மறைப்பதை யும், வேறு யாரும் சத்தியத்தை உணர்ந்து மக்களுக்கு எடுத்துச் சொல்ல முன் வந்தாலும், அவர்கள் மீது அபாண்டமாக அவதூறுகள் கூறி மக்களை அந்தச் சத்தியவான்களிடமிருந்து பிரிப்பதையும் செம்மையாகச் செயல்படுத்தத் திட்டமிட்டு உருவாக்கப் பட்ட கல்வி முறையே இதுவாகும். மக்களை மதத்தின் பெயரால் ஏமாற்றி இந்தப் புரோகிதர்கள் மக்களிடையே தெய்வாம் சத்துடன் திகழவும், அற்ப உலக ஆதாயம் அடைந்து கொள்ளவும், வயிறு வளர்க்கவும் அமைத்துக் கொண்ட மிக இழிவான வழி முறையே இந்த மதரஸா கல்வித் திட்டமாகும்.

**முடிவுரை:**

நீங்கள் இது காலம் வரை பெரிதாக எண்ணிக் கொண்டிருந்த இன்றைய அரபி மதரஸாக்களின் உண்மை நிலையை அறிந்து கொண்டீர்கள். அவற்றில் தங்கி சில ஆண்டுகளுக்குப் பின் மவ்லவி–ஆலிம்(?) என்று ஸனது பெற்று வெளி வருபவர்களின் தரம் பற்றியும் அறிந்து கொண்டீர்கள். இப்படிப்பட்டவர்களை நம்பி இந்தச் சமுதாயத்தை அவர்களிடம் ஒப்படைத்ததால் தான் இஸ்லாமிய சமுதாயம் இந்த அளவு அதலபாதாளத்தில் தள்ளப்பட்டிருக்கிறது. இஸ்லாமிய சமுதாயத் தின் இழிநிலை மாறி அது இழந்துவிட்ட மிக உன்னத நிலையை மீண்டும் எட்டிப் பிடிக்க வேண்டுமென்றால் இரண்டில் ஒன்று அவசியம் செய்யப்பட்டே ஆக வேண்டும். ஒன்று இந்தப் புரோகித முல்லாக்கள் சமுதாயத்தை ஏமாற்றிப் பிழைக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் உருவாக்கி வைத்துள்ள 'பிக்ஹு' என்ற பெயரால் இருக்கும் நூல்கள் அனைத்தையும் நெருப்பிலிட்டு பொசுக்கி விட்டு குர்ஆனையும், ஹதீஸையும் மட்டும் இந்த மதரஸாக்களில் போதிக்க முன் வர வேண்டும். அதற்கு இந்தப் புரோகித முல்லாக்கள் சம்மதிக்கா விட்டால் பொதுமக்கள் தாராளமாக வழங்கி வரும் நன்கொடைகள், ஜகாத், குர்பானித் தோல், மற்றும் தானதர்மங்கள் அனைத்தையும் நிறுத்துவது கொண்டு இந்த முல்லாக்களை வழிக்குக் கொண்டு வர வேண்டும். இதுவும் சாத்தியமில்லா விட்டால் இஸ்லாத்தின் அடிப்படையையே ஆட்டம் காண வைக்கும் இந்த மதரஸாக்கள், நபி (ஸல்) அவர்களின் காலத்தில் 'தாருந்நத்வா' அழித்தொழிக்கப்பட்டது போல் அழித்தொழிக்கப்படுவதைத் தவிர வேறு மார்க்கமில்லை. இதனை முஸ்லிம் சமுதாயம் உணர்ந்து செயல்படும் காலம் வெகுதூரத்திலில்லை.

இன்னொரு தகவலைத் தந்து இக்கட்டுரையை நிறைவு செய்கிறோம். சுமார் 35 அல்லது 36 ஆண்டுகளுக்கு முன்னால் வடநாட்டில் சில நல்லெண்ணம் கொண்டவர்களைக் கொண்டு ஒரு முயற்சி நடைபெற்றது. இந்த மதரஸாக்களில் கடைபிடிக்கப் படும் பாடத் திட்டங்களிலுள்ள குறைகளைப் போக்கிச் சமுதாயத்திற்குப் பலனளிக்கும் வகையில் பாடத்திட்டத்தை மாற்றி அமைக்கும் ஆலோசனை மேற்கொள்ளப்பட்டது. அந்த ஆலோசனைக் கூட்டத்தில் கலந்து கொண்ட முகல்லிது முல்லாக்கள் அதனை மிகக் கடுமையாக எதிர்த்து காரியம் நிறைவேறாமல் ஆக்கி விட்டனர். அதற்கு அவர்கள் கூறிய காரணம் அதைவிட ஆத்திரத்தை உண்டு பண்ணுவதாக இருக்கிறது. 'நமது முன்னோர்களால் எழுதப்பட்ட இப்போதுள்ள கிதாபுகளை வைத்து பாடம் நடத்துவதில் தான் பரக்கத் இருக்கிறது. அந்த கிதாபுகளை அகற்றிவிட்டால் 'பரக்கத்' போய் விடும் என குருட்டு வாதம் செய்துள்ளனர். இப்றாஹீம்(அலை) அவர்களால் போதிக்கப்பட்ட சத்திய இஸ்லாம் மார்க்கத்தில் குறைஷ்களால் இடைக் காலத்தில் புகுத்தப்பட்ட சடங்குகளை நபி(ஸல்) அவர்கள் களைந்து சத்திய இஸ்லாத்தை மீண்டும் நிலைநாட்ட பாடுபட்டபோது குறைஷ்கள் (குறிப்பாக அபூலஹப்) முன்னோர்கள் மீதுள்ள குருட்டு பக்தியால் என்ன வாதத்தை எடுத்து வைத்த னரோ அதே வாதத்தையே இந்த முகல்லிது முல்லாக்களும் எடுத்து வைக்கின்றனர்.

**பிற்சேர்க்கை:**

இந்த ஆக்கம் 1990ல் எழுதப்பட்டதாகும். இதில் தக்லீதையும், தஸவ்வுஃபையும் ஆதரிக்கும் முகல் லிது மவ்லவிகளால் நடத்தப்படும் மதரஸாக்களின் அலங்கோலங்களையும், அசிங்கங்களையும் விலா வாரியாக விளக்கியுள்ளோம். ஆனால் அவர்களிலி ருந்து வேறுபடுத்திக் காட்டத் தங்களை 'தவ்ஹீது மவ்லவிகள்' என்று பீற்றிக் கொண்டு இவர்கள் நடத்தும் மதரஸாக்களின் அலங்கோலங்களையும், அசிங்கங்களையும் அம்பலப் படுத்தாவிட்டால், நாம் நேர்மையான வராக இருக்க முடியாது. பொதுவாக மவ்லவி புரோகிதர்கள் அனைவரும் ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள்தான். மக்களை வழிகெடுத்து நரகில் தள்ளுவதோடு அவர்கள் சுய ஆதாயம் அடைவதே அவர்களின் குறிக்கோள். ஒரு புரோகித குழுவின் பின்னால் செல்லும் மக்களை மதிமயக்கி தங்கள் பின்னால் இழுக்க ஒவ்வொரு குழுவும் ஒவ்வொரு தந்திரத்தை கைக்கொள்ளும்.

தர்கா மவ்லவிகளின் பின்னால் செல்லும் மக்களை தங்கள் பின்னால் இழுக்க தப்லீஃக், தேவ்பந் மவ்லவிகள் தர்கா சடங்குகளைச் சாடுவார்கள். மத்ஹபு மவ்லவிகள் பின்னால் செல்லும் மக்களை

மவ்லவி புரோகிதர்களின் சுயநல, வசீகர உடும்புப் பிடியிலிருந்து விடுபட படியுங்கள், பரப்புங்கள் அந்நஜாத்!

தங்கள் பின்னால் இழுக்க தவ்ஹீத் மவ்லவிகள் மத்ஹபுகளைச் சாடுவார்கள். இப்படி ஒவ்வொரு புரோகித மவ்லவி வர்க்கமும், மற்ற புரோகித மவ்லவிகள் பின்னால் செல்லும் மக்களை தங்கள் பின்னால் இழுக்க அதற்கேற்றவாறு நடிப்பார்கள். ஆக புரோகித மவ்லவிகள் அனைத்துத் தரப்பாரும் தங்கள், தங்கள் பக்கம் மக்களை இழுத்துத் தங் களை தக்லீது செய்ய வைக்க முற்படுவார்களே அல் லாமல், தக்லீதை விட்டு விலகி சுயமாக ஒவ்வொரு ஆணும், பெண்ணும் தன்னம்பிக்கையுடன், சுய சிந்தனையுடன் குர்ஆன், ஹதீஸை நெருங்க விடமாட்டார்கள். குர்ஆன் ஹதீஸை அரபு தெரிந்த வர்கள்தான் விளங்க முடியும் என்பார்கள். முன் னோர்கள் விளங்கியபடிதான் நாம் விளங்க வேண் டும் என்பார்கள். ஸலஃபி மவ்லவி புரோகிதர்கள் நபிதோழர்கள் விளங்கியபடிதான் விளங்க வேண் டும் என்பார்கள்.

மற்றபடி எந்தப் புரோகித மவ்லவி வர்க்கமும் அல்குர்ஆன் 7:3 மற்றும் 33:36, 66,67,68 கட்டளைப் படி ஒவ்வொரு ஆணும், பெண்ணும் சுயமாக குர்ஆன், ஹதீஸை நேரடியாக விளங்கிச் செயல்பட வேண்டும் என்று மக்களுக்கு உபதேசிக்க முன் வரமாட்டார்கள். மக்கள் புரோகித மவ்லவிகளின் கட்டுப்பாட்டுக்குள் இருக்க வேண்டும் என்பதே அவர்கள் அனைவரின் குறிக்கோள். எனவே அனைத்துத் தரப்பு மவ்லவி புரோகிதர்களின் கல்வித் திட்டமும் புரோகித அடிப்படையில் இருக் குமே அல்லாது புரோகிதம் கலக்காமல் இருக்கவே இருக்காது. அந்த அடிப்படையில் தமிழகத்தில் தவ்ஹீது மவ்லவிகளால் நடத்தப்படும் மதரஸாக் களும் புரோகித அடிப்படையில் அமைந்த கல்வித் திட்டத்தையே கொண்டுள்ளன. அந்த மதரஸாக் களிலிருந்து வெளிவரும் மவ்லவிகள் கூலிக்குப் பள்ளிகளில் இமாமத் செய்கிறவர்களாகவோ, கூலிக்குப் பிரச்சாரம் செய்கிறவர்களாகவோ, கூலிக்கு அவர்களின் மதரஸாக்களில் பணி புரிகிற வர்களாகவோ இருக்கிறார்களே அல்லாமல் சுய மாக உழைத்து சம்பாதித்து வாழ்க்கை நடத்துவ தோடு மறுமைக்காக தீன் பணி செய்கிறவர்களாக இல்லை. வட்டித் தொழில் செய்கிறவர்கள் வட்டியை வேறு பெயரால் அழைப்பது போல், இவர்கள் குர்ஆன், ஹதீஸ் போதனைக்கு முரணாக மார்க்கப் பணிக்கு வாங்கும் கூலியை வேறு, வேறு பெயர்களால் நியாயப்படுத்துகிறார்கள். இதுதான் வித்தியாசம்.

முகல்லிது மவ்லவிகள் நடத்தும் மதரஸாக்களில் இமாம்களின் பெயரால் கற்பனை செய்யப்பட்ட 'பிக்ஹ்' சட்டங்கள் போதிக்கப்படுகின்றன. குர் ஆன், ஹதீஸை விளங்குவதில் முன்னோர்களை விட இமாம்களை விட, ஏன்? நபிதோழர்களை விட நாங்கள் திறமைசாலிகள் என்று மார்தட்டிக் கொள் கிறார்கள் தவ்ஹீத் மவ்லவிகள்; அப்படித் திறமை யாக விளங்கும் இந்த தவ்ஹீத் மவ்லவிகளிடம் மார்க்கச் சட்டங்கள் காலத்திற்குக் காலம் மாறுத லடையும். ஆரம்பத்தில் வாக்களிப்பது 'ஹராம்-ஷிர்க் என ஃபத்வா கொடுத்தார்கள். பின்னர் வாக்க ளிப்பது கடமை என்றார்கள். முன்னர் 19 ஜனஸாக் களில் நடந்து சென்றா வாக்களிக்கப் போகிறீர்கள்? என்று கேள்வி எழுப்பினார்கள். பின்னர் அந்த 19 ஜனஸாக்களின் மீது நடந்து சென்றே வாக்களியுங் கள் என்றார்கள். அன்று பெண் ஆட்சித் தலைமைப் பொறுப்பை ஏற்பது நாட்டுக்குக் கேடு; நாடு உருப் படாது என்றார்கள். பின்னர் பெண்ணை ஆட்சி யில் அமர்த்துவது மார்க்கக் கடமை. அதற்காக உயிரைக் கொடுத்துப் பிரசாரம் செய்வது கடமை என்றார்கள். அன்று தேர்தல் பிரசாரத்தில் ஈடுபடு வது ஈமானை இழக்கச் செய்யும். தேர்தல் பிரசாரம் செய்வது ஹராம் என்றார்கள். இன்று பிரசாரம் செய்வது கடமை என்கிறார்கள். அன்று 'இஸ்லாம்' அல்லாத இயக்கம் எங்களுக்கு இல்லை என்றார்கள். இன்று எண்ணற்ற இயக்கங்களை உருவாக்கி இருக்கிறார்கள். அன்று நாங்கள் புரோகிதர்களை சப்ளை செய்வதில்லை என்றார்கள். இன்று புரோகிதர்களை மதரஸாக்களில் உருவாக்கி சப்ளை செய்து கொண்டிருக்கிறார்கள். இதுபோல் எண்ணற்ற விஷயங்களில் எத்தனையோ அந்தர் பல்டி அடித்திருக்கிறார்கள். தவ்ஹீத் மவ்லவி புரோகிதர்களின் அகரா தியில் மார்க்கச் சட்டங்கள் அதாவது 'பிக்ஹ்' காலத்திற்குக் காலம் அவர்கள் வசதிக்கேற்ப மாறும். அந்த வகையில் முகல்லிது புரோகிதர்கள் பரவாயில்லை என்றே சொல்லலாம். கடந்த ஆயிரம் ஆண்டுகளாக எந்த மாறுதலும் இல்லாமல் அவர்களின் முன்னோர்கள் கற்பனை செய்ததை அப்படியே அணுவளவும் பிசகாமல் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களின் மார்க்கச் சட்டங்கள்-பிக்ஹ் குர்ஆனுக்கும், ஹதீ ஸுக்கும் முரணாக இருந்தாலும் அவர்கள் சொன் னதையே மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டி ருப்பார்கள். மாற்றத்தைப் பார்க்க முடியாது. சு.ஜ. மவ்லவிகள் இஜ்மா, கியாஸ் என மக்களை ஏமாற்று கிறார்கள். ததஜ மவ்லவிகள் லாஜிக், பாலிசி என மக்களை ஏமாற்றுகிறார்கள்.

மேலும் முகல்லிது மவ்லவிகள் நடத்தும் மதர ஸாக்களில் எப்படி ஓசிச் சோறு போட்டு புரோகிதர் களை பெருக்குகிறார்களோ அதேபோல்தான் தவ்ஹீது மவ்லவிகள் நடத்தும் மதரஸாக்களிலும் ஓசிச் சோறு போட்டு புரோகிதர்களைப் பெருக்கு கிறார்கள். முகல்லிது மவ்லவிகள் நடத்தும் மதர ஸாக்களில் காணப்படும் ஒழுங்கீனங்கள், ஒழுக்கக் கேடுகள், ஓரினப் புணர்ச்சி இவை அனைத்தும் தவ் ஹீது மவ்லவி புரோகிதர்கள் நடத்தும் மதரஸாக் களிலும் நிறைந்தே காணப்படுகிறது. தாங்களும் புரோகிதர்கள்தான் என்பதை நிலைநாட்டுகிறார் கள். எப்படி கழுதை விட்டையில் முன்விட்டை பின்விட்டை என்ற வேறுபாடு இல்லையோ அதே போல் இந்தப் புரோகித மவ்லவிகளிலும் வேறுபாடு இல்லை. முஸ்லிம் சமுதாயம் குறிப்பாக வாலிபர் கள் இந்தப் புரோகிதர்களின் பிடியிலிருந்து விடுபட் டால் மட்டுமே சமுதாயம் உருப்பட்டு முன்னுக்கு வரும். அது இழந்து விட்ட பெருமையை மீண்டும் பெறும். அல்லாஹ் அருள்புரிவானாக!

மவ்லவி புரோகிதர்களின் சுயநல, வசீகர உடும்புப் பிடியிலிருந்து விடுபட படியுங்கள், பரப்புங்கள் அந்நஜாத்!